# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை



சிலம்பு-௫௭] வள்ளுவர் ஆண்டு-௨௦௧௪, ஆனி, July'83 [பரல்-௧௧

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)




---

## "செந்தமிழ்ச் செல்வி"

### விளம்பரக் கட்டணம்

| | |
|---|---|
| மேலட்டை 4ஆம் பக்கம்-முழுப் பக்கம் (Back Wrapper 4th Page) | ரூ. 100/- |
| மேலட்டை 3ஆம் பக்கம்-முழுப் பக்கம் (Wrapper 3rd Page) | ரூ. 80/- |
| முழுப் பக்கம் (உள்ளே) (Full Page-Inside) | ரூ. 60/- |
| அரைப் பக்கம் (உள்ளே) (Half Page-Inside) | ரூ. 40/- |

---

## "செந்தமிழ்ச் செல்வி"

ஆண்டுக் கையொப்பம் :

உள்நாடு ரூ. 16 00 வெளிநாடு ரூ. 30 00

வாழ்நாள் கையொப்பம் :

உள்நாடு ரூ. 150 00 வெளிநாடு ரூ. 300 00

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௪, ஆனி<br>ஜூலை 1983 | பரல் |
| --- | --- | --- |
| ௫எ | | ௧௧ |

# மக்கட் பெயர்

இவ்விந்திய துணைக் கண்டத்தில் தமிழ்நாட்டில் மட்டுமே மொழியின் அடிப்படையில் பல சிக்கல்கள் பேசப்படுகின்றன—எழுப்பப்படுகின்றன. மொழிப்பற்று என்றும், மொழி டிணர்வு என்றும் பேசவேண்டிய நிலையில் இருக்கிறோம். தமிழகத்தைத் தவிர உலகில் வேறெந்நாட்டிலும் இத்தகைய பேச்சுகள் எழக் காணோம். இங்கு நாம் தனித்தமிழ் என்று பேசுவதுபோன்று வேறெங்கும் பேசக்கண்டிலம். மேனாட்டில் தனி ஆங்கிலம், தனி பிரெஞ்சு என்றெல்லாம் பேசுவாரில்லை. அங்ஙனமே, நம் நாட்டில் தனித் தெலுங்கு, தனி மலையாளம், தனிக் கன்னடம் என்று பேசுவாரில்லை.

எனினும் தமிழகம்மட்டும் மொழித்துறையில் தன்னுடைய தனித்தன்மையைக் காப்பாற்றிக்கொள்வதில் கண்ணுங்கருத்து மாக இருந்து வருகிறது. மறைமலையடிகளார் காலத்துக்கு முந்தி இருந்த ஓரளவு சமக்கிருத கலப்பு நடையும் பேச்சும் இன்னபிற வெல்லாம் அடிகளார் தனித்தமிழ் இயக்கம் தோற்றுவித்த பின்னர் கதிரவனைக்கண்ட பனிபோல மறையத் தொடங்கி விட்டன.

ஆனால் அதே நேரத்தில் தமிழகத்தில் பிறமொழியின் மேலாண்மை அகன்றுவிட்டதா எனில், இல்லை. அதுவும் தன்னாலியன்ற முயற்சிகளையெல்லாம் கையாண்டு, பலப்பல உருவங்களில்—காலத்துக்கேற்ற முறைகளில் தமிழின் ஊடே புகுந்து தனது செல்வாக்கை நிலைநாட்டிக்கொள்ளப் பார்க்கிறது.

மகிழ்ந்தனர். இடையில் நாற்பது ஐம்பதாண்டுகள் பெரும்பாலான இல்லங்களில் நல்ல தமிழ்ப்பெயர்கள் குழந்தைகட்குச் சூட்டப்பெற்றன. இதில் பேரீடுபாடுகொண்ட முன்னுள் கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் 'மக்கட்பெயர் அகரவரிசை' என்ற சிறுநூலில் நல்ல தமிழ்ப் பெயர்களைத் தொகுத்து வெளியிட்டார்கள்.

அண்மையில் நடைபெற்ற நாடகத் தொடக்க விழாவில் கலந்துகொண்ட செட்டிநாட்டரசர் முத்தையா செட்டியார் அவர்கள் இத்தகைய அயல் மொழிப் பெயர்களைத் தாக்கியுள்ளார்.

"லடா, லோடா என்று எப்படியெல்லாமோ குழந்தைகளுக்குத் தமிழ்நாட்டில் இன்று பெயரிடுகிருர்கள். தென் ஆப்பிரிக்காவிலுள்ள தமிழர்கள் இன்றும் வள்ளியம்மை, அன்னபூரணி என்பனபோன்ற நல்ல பெயர்களை இடுகின்றனர். நம் நாட்டில்மட்டும் ஏன் இப்படி வாயில் நுழையாத பெயர்களைச் சூட்டுகிருர்கள்" என்று செட்டிநாட்டரசர் அவர்கள் கூறினர்கள்.

முன்னுள் கழக ஆட்சியாளர் அவர்கள் குழந்தைகளுக்குத் தனித்தமிழ்ப் பெயர்களையே சூட்டி மகிழ்வார்கள். தாம் மறைவதற்கு ஒரு திங்களுக்கு முன்னர்கூடத் தம்முடைய பேத்தி பெற்றெடுத்த பெண்மகவிற்குப் 'பொற்செல்வி' என்று பெயர் சூட்டி மகிழ்ந்தார்கள்.

தமிழர்கள் தம் மக்களுக்கு நல்ல தமிழ்ப் பெயர்களையே சூட்டுதல் வேண்டும். தமிழுணர்வு பெருகுவதற்கு இது நல்ல வழிவகுக்கும். இல்லையேல் 'தமிழகத்தின் தமிழ்த் தெருவில் தமிழ் தானில்லை' என்று பாவேந்தர் பாடினுரே அதுபோலத் 'தமிழகத்தின் தமிழன் வீட்டில் தமிழ்தானில்லை' என்ற நிலையே தோன்றிவிடும். இதனைத் தமிழுணர்வுடையோர் சிந்திப்பார்களாக!

---

## இப்படியும் சிலர்!

தமிழ் அழிப்பார் எனினும் அவர்
தமிழ் வளர்ப்போம் என்றுரைத்துத்
தமை வியப்பார்

தமிழ் வளர்ச்சி தடைப்பட்டால்
தம்வளர்ச்சி உண்டென்றும்
நினைப்பார் சில்லோர்!

—புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்.

# திருக்குறளும் கலைச்சொல்லாக்கமும்

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

(முன் பரல் ௪௨௭ஆம் பக்கத் தொடர்ச்சி)

**கூம்பு :**

குவிதல் பொருள் தருவது, கூம்புதல் என்னும் சொல். மலர்தலும் குவிதலும் நீர்ப்பூக்களின் இயற்கை. குவிதலைக் கூம்புதலாக ஈரிடங்களில் வள்ளுவர் காட்டினார்.

"உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்லது அறிவு"

"கொக்கொக்க கூம்பும் பருவத்து"

என்பவை அவை.

கூம்புதல் கூப்புதலும் ஆகும். கூப்பும் கையைப் பார்த்தே அறியலாம்; கைகூப்பல், கைகுவித்தல் என்னும் வழக்கும் புலப்படுத்தும். அகன்று விரிந்து மேலுயர்ந்து கூர் நுனைபோல் அமைந்துள்ள ஒரு மலை, 'கூமாச்சி மலை' எனச் சேற்றூர்ப் பகுதியில் வழங்கப் பெறுகிறது. 'வட்டக் கூமாச்சி' என்றொரு மலையும் வருச நாட்டுப் பகுதியில் உள்ளது. இக் கூம்புதல் வடிவக் கணக்குக் கலைச் சொல்லாகிய 'கூம்பு' என்பதை வழங்கியுள்ளமை அறியத்தக்கதாம்.

**ஒடுக்கம் :**

'அடக்கம் ஒடுக்கம்' என்னும் இணைச்சொல் எவரும் அறிந்தது. ஒடுங்குவது 'ஒடுக்க'மாகும். எவற்றையும் தன்னுள் ஒடுக்கும் இறைவனை—அல்லது எல்லாமும் தன்னுள் ஒடுங்குவதற்கு இடமாக இருக்கும் இறைவனை—'ஒடுங்கி' என்பார் மெய்கண்டார். திருவள்ளுவர் ஒடுங்குதலையும் ஒடுக்கத்தையும் ஆட்சி செய்துள்ளார்.

"தொழுதகையுள்ளும் படையொடுங்கும்"

என்பதும்,

"ஊக்கமுடையான் ஒடுக்கம்"

என்பதும் அவை.

இவ் வொடுக்கம் என்னும் சொல்லாட்சி இந்நாளில் துறவியர் இயற்கையுறுதலையும் இயற்கையுற்று அடக்கி வைக்கப் பெற்ற இடத்தையும் குறிப்பதாய் விளங்குகின்றது. சிற்றூர் பேரூர்களிலும் துறவியர்கள் ஒடுக்கங்கள் இருத்தல் கண்கூடு.

**உயிர்நிலை :**

உடல், யாக்கை என்பவை பொருளொடு பொருந்தி வழங்கும் சொற்கள். இவ் வுடம்பிற்குப் புதியதொரு சொல்லை வழங்குகிறார் திருவள்ளுவர். அஃது உயிர்நிலை என்பதாம். உயிர், நிலைபெற்று இருப்பதற்கு இடமாகி இருப்பது எதுவோ அது, உயிர்நிலை என ஆளப்பெறுகிறது.

> "அன்பின் வழியது உயிர்நிலை"
>
> "உண்ணாமை உள்ளது உயிர்நிலை"
>
> "கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை"

என்பவை உயிர்நிலைபெறுந் தன்மையையும் உடலையும் குறிப்பனவாம்.

**முதுக்குறை :**

முதுவர் என்பது அறிவாளரையும், முதுக்குறைவு என்பது அறிவு நிரம்புதலையும் குறிக்கும். கண்ணகியாரைச் 'சிறுமுதுக்குறைவி' என்பார் இளங்கோவடிகளார். இனி, முதுக்குறைதல் என்பது பூப்படைதலைக் குறிக்கும் என்பது, "முதுக்குறைந்தனளே முதுக்குறைந்தனளே" எனவரும் பழம்பாடலால் விளங்கும். பூப்புறுதலைப் புரிவறிதல், அறிவடைதல், பெரியவன் ஆதல், சமைதல் என வழங்கும் வழக்காறுகள் முதுக்குறைவின் வேர்ப்பொருளொடு தொடர்புறுத்தி வியப்புறுத்துவனவாம்.

> "முகத்தின் முதுக்குறைந்த துண்டோ உவப்பினும்
> காயினும் தான்முந் துறும்"

என்பது முதுக்குறைக் குறள். பூப்பு நீராட்டு 'முதுகுறை நீராட்டு' ஆதற்கும் உரிய கலைச் சொல் வளமாம்.

**காடி :**

புளித்துப்போன பழங்கஞ்சி 'காடி' எனப்பெறும். "காடிக் கஞ்சியானாலும் மூடிக்குடி" என்பது பழமொழி. காடிப்பானை என ஒரு மிடாப்பானை உழவர் குடும்பங்களில் உண்டு. வடிநீர், பழங்கஞ்சி, ஊறல் முதலியவெல்லாம் அப் பானையில் விட்டுப் புளிம் பேற்றப்பெற்று நுரைத்திருக்கும். அதனை நீரொடு கலந்து வைத்தால் மாடுகள் மண்டிக் குடிக்கும். இப் புளிங் 'காடி' அறிவியல் கலைச்சொல் ஆகித் திகழ்கின்றது.

**தேற்றம் :**

தேற்றம் என்பது தெளிவு என்னும் பொருட்டது. "அன்பு அறிவு தேற்றம் அவாவின்மை" என்று எண்ணுவார் திருவள்

ளுவர் ''அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்'' என்று தேற்றத்தின் அருமையை விளக்குவார். இத் தேற்றம், முற்றத் தெளிந்து உறுதிப்படுத்தப்பெறுதலைக் குறிக்கும் கலைச் சொல்லாக அமைந்துள்ளது முக்கோணத்தின் மூன்று பக்கங்களும் 180 பாகைகளை உடையது என்னும் கணக்கீடு மாறுமை 'தேற்றம்' எனப்பெறும். மாற்றமில்லாமையைத் தெளிந்து நிறுவப் பெற்றதாகலின், தேற்றம் என்னும் சொல் 'தியரம்' (theorem) என்னும் ஆங்கிலச்சொல்லுக்குப் பெயர்ப்பாகிய கலைச் சொல்லாகி விளங்குகின்றது.

துச்சில் :

தம் இல்லிருத்தல், தமது பாத்துண்ணல் என்பவை வள்ளுவ வாழ்வின் வலியுறுத்தல். ஆனல் 'தம்மில்' இருக்க இக்காலப் பரபரப்பும் வறுமைக் கோடும் பணிநிலையும் புதுப்போக்கும் இடந் தருமாறில்லை. குடிக் கூலி இடந்தேடிக் குடியிருக்கும் கட்டாயம் ஏற்பட்டு விடுகின்றது. அம்மட்டோ? ஒட்டுக்குடி, ஒண்டிக்குடி என்ற நிலையிலும் அடுத்து வாழும் நிலைமை அமைந்துவிடுகின்றது. இச் சூழலில், ''பெற்றேம்யாம் என்று பிறர் செய்த இல்லிருப்பாய் கற்றதிலை மன்றகாண்'' என்று இடித்துரைக்கும் முல்லைக் காதலியர் முகிழ்த்தல் அரிதாம் (கலி. 111) ஒட்டுக் குடித்தனம் ஒண்டிக் குடித்தனத்திற்கு ஒரு சொல் வேண்டுமே! அவரவர் கட்டி வாழும் இல்லத்தைப் புக்கில் என்பது வள்ளுவம். ஒட்டுக் குடியைத் துச்சில் என்பதும் வள்ளுவம்.

''புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு''

என்பது அது.

கொள்கலம் :

கிண்ணம், ஏனம், தட்டம், கலம், குவளை முதலியவை, பொருள்களை வைத்துப் பேணற்கு உரியவை. பேழை நிலைப் பேழை, அட்டளை முதலியவையும் அத்தகையவற்றுள் பரியவை. பொருள்களைத் தன்கண் வைத்துப் பேணும் அவற்றின் பொருள் அறிந்து 'கொள்கலம்' எனப் பெயரிட்டனர். ''அணி, ஆடை, சாந்து முதலியன பெய்கலமும் பிழாவும் பிறவும் கொள்கலம்'' என்று அகரமுதலிகள் கூறும். இக்கலைச் சொல்லை வள்ளுவர்,

''இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பான் உடம்பு''

என்று ஆட்சி செய்தார். பொருள்களைக் கொள்ளும் கலமாகச் சுட்டப்பெற்ற கொள்கலம், பண்பின் கொள்கலம், சால்பின் கொள்கலம், அன்பின் கொள்கலம் எனப் பண்பியல் சுட்டுவதாகவும் வழக்கில் ஊன்றியுள்ளது. (தொடரும்)

# நியூசிலாந்தில் காணப்படும் 'தமிழ்மணி'

[பி. எல். சாமி, ஐ. ஏ. எஸ்.]

நியூசிலாந்தின் தலைநகரான வெல்லிங்டன் பொருட்காட்சியகத்தில் தமிழ் வாசகம் பொறித்த ஒரு வியப்புக்குரிய ஆலயமணி காட்சிக்காக வைக்கப்பட்டுள்ளது. வெண்கலத்தால் ஆன இப்பெரிய ஆலயமணி 5½ அடி உயரமும் 4 அடி விட்டமும் கொண்டதாகும். இந்த மணியின் விளிம்பில் பொறிக்கப்பட்ட



தமிழ் வாசகத்திலிருந்து இந்த மணி ''முகைதீன் வகூசுவின் மணி'' என்பது விளங்குகின்றது. பஸிபிக் தீவுகளில் ஒன்றான 'குவம்' பல்கலைக்கழகப் பேராசிரியரான முனியப்பன் என்பவர் திசம்பர் 18ந் தேதி 'இந்து' நாளிதழில் ஆசிரியருக்கு எழுதிய கடிதத்தில் இவ் வெண்கலமணியைப்பற்றி மேலும் ஆராய்ச்சி செய்ய வேண்டுமென்று எழுதியிருந்தார். இந்த மணி நியூசிலாந்தில் வாழும் பழங்குடிகளான மாவோரியரிடம் இருந்ததை முதன் முதலில் கண்டுபிடித்தவர் வில்லியம் கோலான்சோ என்ற பாதிரியாராகும். இந்த மணியில் காணப்படும் தமிழ் எழுத்திலிருந்து, கி.பி. 1400லிருந்து கி.பி. 1540ஆம் ஆண்டுக்குள் இந்த மணி செய்யப்பட்டிருக்கலாம் என்று கணித்துள்ளனர்.

இந்த ஆலயமணி எப்படிச் சென்றது என்பதுபற்றி நியூசிலாந்தில் சர்ச்சைகள் நடந்தன. கோலான்சோ பாதிரியார் நியூசிலாந்தின் மேற்குக் கரையில் இம் மணியைப் பார்த்தபோது மாவோரி பழங்குடிகள் இதைச் சமையல் பாத்திரமாகப் பயன் படுத்தி வந்தனர். இந்த மணி கி. பி. 1236ஆம் ஆண்டிற்கும் கி. பி. 1840ஆம் ஆண்டிற்கும் இடையில் நியூசிலாந்தில் கண்டு பிடிக்கப்பட்டதாகக் கூறுவர். இவ் வாலயமணி சுழற்காற்ருல் அலைக்கழிக்கப்பட்ட கப்பலிலிருந்து கரையோரம் தள்ளப்பட்ட்தாக இருக்கலாம் என்று சில நியூசிலாந்து ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். இந்த ஆலயமணி தமிழ்மரக்கல ராயர் நியூசிலாந்திற்குக் கொண்டு சென்ற மணி எனவும் கருதினர். மற்றும் இந்த மணியைப் போர்ச்சுக்கீசிய கப்பல் எடுத்துச் சென்றிருக்கலாமென்றும் அக் கப்பல் புயற்காற்ருல் விபத்துக்குள்ளாகி நியூசிலாந்து கடற்கரையில் ஒதுங்கினதாயும் சிலர் கருதுகின்றனர். எப்படி இருப்பினும் இந்தத் 'தமிழ்மணி' பல மைல்களுக்கு அப்பாற்பட்ட நியூசிலாந்து நாட்டில் காணப்பட்டது வியப்புக்குரியது.

நியூசிலாந்து தீவில் தற்போது அரிதாக நீர்நாய்கள் கடற்கரை ஓரமாகக் காணப்படுகின்றன. வெள்ளைக்காரர்கள் அத்தீவில் குடியேறியபோது இந்த நீர்நாய்களைக் கண்டு கூறிய கதைகளும் வழங்குகின்றன. வெள்ளைக்காரர்கள் சில கப்பல்களில் வந்தபோது ஒரு பெரிய படகில் சில மனிதர்களைப் பார்த்ததாகவும் அதில் ஐவர் நாய்த்தலைகளையுடையவர்களாகக் காணப்பட்டதாகவும் கூறினர். நீர்நாய் உலகின் தென்கோடியில் உள்ள நியூசிலாந்து தீவுக்குரிய இயற்கையான விலங்கன்று. இந்த நீர்நாய் நியூசிலாந்துக்குரியது என்பது அறிவியலிற்கும் உண்மைக்கு முற்றிலும் ஒவ்வாததுமாகும். ஆதலின் இந்த விலங்கு இத் தீவில் ஒதுங்கிய தமிழரது கப்பலிலிருந்து வந்து பல்கி, ஏதோ ஒரு சில நீர்நாய்கள் மட்டும் கரையோரமாக இன்றும் வாழ்வதாகக் கருதுகின்றனர். இக் கருத்து ஏற்றுக் கொள்ளத்தக்கதாகும். சங்க காலத்திலிருந்து இக்காலம் வரை நீர்நாய்கள் தமிழக, கேரளக் கடற்கரைகளிலும் ஆறுகளிலும் வாழ்கின்றன. எனவே, கொச்சித் துறைமுகத்திலிருந்து புறப்பட்டுச் சென்ற ஒரு மரக்கலராயர் கப்பல் விபத்துக்குள்ளாகி நியூசிலாந்து கடற்கரையில் ஒதுக்கப்பட்டபோது ஆலய மணியும், நீர்நாயும் இத்தீவுக்குச் சென்றிருக்க வேண்டும் என்று நம்பலாம். வெள்ளைக்காரர்கள் கூறிய கதையில் வரும் நாய்த்தலை மனிதர்கள் என்று கருதப்பட்டவர்கள் நீர்நாய்க

ளாகவே இருக்கலாம். நீர்நாயைத் தென் கோடிக் கண்டங்களில் காணவே முடியாது.

மாவோரிப் பழங்குடி மக்கள் 'பூமெராங்' என்ற பெயரை யுடைய வளைந்த தடியைச் சிறு விலங்குகளை வேட்டையாடவும், பிறருக்கு ஊறு செய்யவும் பயன்படுத்துகின்றனர். இந்த 'பூமெராங்' பிறை வடிவாக இருக்கும். நடுவில் பெருத்தும் நுனி சிறுத்தும் இருக்கும். இந்த 'பூமெராங்கை' எவன் வீசுகின்றனோ அவன் கையில் திரும்ப வந்து சேரும் என்று மாவோரிகள் கூறுவர். தமிழ்நாட்டுக் கள்ளர்கள் ஓரிரு நூற்றாண்டுகளுக்கு முன்னர் வளைதடி வீசிச் சிறு விலங்குகளை வேட்டையாடினர். இந்தப் படைக்கருவியைச் சங்க காலத்திலேயே முயலை வேட்டை யாடப் பயன்படுத்தினர் என்று பின்வரும் ஐங்குறுநூற்றுப் பாடலில் (421) கூறப்பட்டதைக் கவனிக்க வேண்டும்.

> "பாலை வெண்கமழ் காவலர் வீச
> நறும்பூம் புறவி னொடுங்குமுய லிரியும்."

சென்னைப் பொருட்காட்சியகத்தில் தந்தத்தால் செய்த வளை தடியை இன்றும் காணலாம். இந்த வகைப் படைக் கருவி வேற்று நாடுகள் எதிலும் உபயோகத்தில் இல்லை என்பது குறிப் பிடத்தக்கது. வளைதடியை இன்றும் பூசைக்குரிய பொருளாகக் கருதுவர். திருமணச் சடங்குகளிலும் வளைதடியை அனுப்பிப் பெண்ணைக் கொண்டுவரும் வழக்கம் கள்ளர்களிடையே அண்மைக் காலம் வரை இருந்தது. இதன் காரணமாக "மறவர் கொடுப்பது வளரிப்பிரசாதம்' என்ற பழமொழியும் வழங்கின துண்டு. மாவோரிப் பழங்குடி மக்கள் பயன்படுத்தும் 'பூமெராங்' போன்ற ஆயுதமே வளைதடியாகும். இந்த வளைதடியையே பழந் தமிழர்கள் மாவோரிப் பழங்குடி மக்களிடையே வழங்கும்படி செய்திருக்கலாம். பழங்கற்கால நாகரிக மக்களான மாவோரிகள் நாகரிகம் அடைந்த தமிழர்களிடமிருந்து 'பூமெராங்' என்ற ஆயுதத்தைச் செலுத்தும் பழக்கத்தைக் கற்றிருக்கலாம்.

ஆகவே நியூசிலாந்தில் காணப்படும் ஆலயமணி, நீர்நாய், வளைதடி ஆகியவை திரைகடலோடித் திரவியந் தேடிய பண்டைத் தமிழ்மக்களிடமிருந்து மாவோரிகள் தெரிந்துகொண்டதாகக் கருதலாம்.

(நன்றி : தினமணி கதிர்: 22—5—83)

———

# சுந்தரர் செந்தமிழ்

[டாக்டர் சோ. ந. கந்தசாமி, இந்தியத்துறை,

மலாயா பல்கலைக்கழகம், கோலாலம்பூர்]

(முன் இதழ் ௪௪௪ ஆம் பக்கத் தொடர்ச்சி)

**தமிழ்த்திறம்**

சிவபிரானிடத்தில் கொண்ட ஈடுபாட்டிற்கு ஒப்பாகவே செந்தமிழிடத்திலும் சிறந்த ஈடுபாடு கொண்டிருந்தார் சுந்தரர். இறைவனை அடைவதற்குத் தமிழினைக் கருவியாகக் கொண்டவர் சுந்தரர். மறைகளை அருளிய வாயினால் தன்னைத் தமிழில் பாடுமாறு வன்தொண்டராகிய சுந்தரரை ஆண்டவனே வேண்டினான். இதனைச் சேக்கிழார்,

> "மற்றுநீ வன்மை பேசி வன்றொண்டன் என்னும் நாமம்
> பெற்றனை; நமக்கும் அன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க
> அர்ச்சனை பாட்டே ஆகும்; ஆதலால் மண்மேல் நம்மைச்
> சொற்றமிழ் பாடு கென்றார் தூமறை பாடும் வாயார்"

என்று தெளிவுறுத்தக் காணலாம். பாரதிகூட "சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே" என்று இசைத்தல் நோக்குக. உலக மொழிகளில் பக்தியைப் புலப்படுத்தவல்ல பாங்கும் பண்ணமைப்பும் படைத்த மொழி தமிழே என்பது பன்மொழி பயின்ற வல்லுநர் கருத்தாகும். சைவ சமயத்தின் புண்ணியக் கண்கள் எனப் போற்றப்பெறும் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய இருவர் தமிழினிமையினையும் ஈசன் கேட்டு மகிழ்ந்து அருள் சுரந்த தன்மையினைச் சுந்தரர் பெரிதும் மதித்து,

> "நாளும் இன்னிசை யால்தமிழ்
> பரப்பும் ஞானசம்பந்தனுக்கு உலகவர்முன்
> தாளம் ஈந்தவன் பாடலுக்கு இரங்கும்
> தன்மையாளனை என்மனக் கருத்தை"

> "நல்லிசை ஞானசம் பந்தனும் நாவினுக்
> கரையனும் பாடிய நற்றமிழ்மாலை
> சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானை"

> "தெரிந்த நான்மறையோர்க்கு இடமாய திருமிழலை
> இருந்து நீர்தமி ழோடிசை கேட்கும்
> இச்சையாற்காசு நித்தல் நல்கினீர்"

எனவரும் பாசுரப் பகுதிகளில் உளங்குளிர எடுத்தோதியுள்ளார். தமிழிசையாக இறைவன் திகழ்தலைச் சுந்தரர், "பண்ணிடைத் தமிழ்ஒப்பாய்" எனப் போற்றியுள்ளார்.

திருப்பைஞ்ஞீலி என்னும் தலத்தில் கோயில் கொண்டுள்ள ஈசனை நோக்கிச் சுந்தரர் பாடிய பாடலில் பலியேற்க வரும் பிட்சாடண மூர்த்தியைக் கண்டு மையல் கொண்ட மகளிர் ஐயனை வினவியதாக ஒரு கற்பனைக் காட்சியைச் சுந்தரர் புனைந்துள்ளார். செக்கர் வானம் போலச் செம்மேனி எம்மான் முன் கையில் அரவம் படம் எடுத்து ஆட, கையில் திருவோடு தாங்கி வீடுதொறும் பிச்சை கேட்டு நிற்கிறார்! பிச்சையிட வருகிற கன்னிப் பெண்கள் அவர் தோற்றத்தைக் கண்டு ஆற்றலழிந்து மலைத்து நிற்கின்றனர். அவர் கையில் அரவம் படம் எடுத்து மகிழ்ந்து ஆடுவதைப் பார்த்து ஒரு பக்கம் அச்சம், மறுபக்கம் வியப்பு! அரவங்கள் கட்டுப்பட்டு அவர் கையில் இருப்பதற்குக் காரணம் செந்தமிழ்ப் பண்ணின் திறங்களைப் பரமன் பாடுவதில் வல்லவனாய் விளங்குவதால் போலும் என்று எண்ணுகின்றார். தமிழிசையைக் கேட்டுக் கொடிய அரவுகூட கொடுஞ் செயல் தவிர்ந்து விளங்குகிறது என்றால் தமிழின் இனிமையை என் னென்பது என்ற கருத்தில் சுந்தரர்,

"செந்தமிழ்த் திறம் வல்லிரோசெங்கண்
அரவம் முன்கையில் ஆடவே
வந்து நிற்கும் இதென் கொலோ
பலி மாற்ற மாட்டோம் இடகிலோம்
பைந்தண் மாமலர் உந்துசோலைகள்
கந்தம் நாறுபைஞ் ஞீலியீர்
அந்தி வானமும் மேனியோசொலும்
ஆரணீய விடங்கரே"

என்று சுந்தரர் எழிலோவியமாகப் புனைந்து பாடுதல் எண்ணி மகிழத்தக்கது.

சைவ ஆகமங்களிலும் சிற்பசாத்திரங்களிலும் தோத்திரங் களிலும் இறைவனின் அறுபதின்மிக்க அருள் வடிவங்கள் பேசப் பெற்றுள்ளன. அவற்றுள் தென்னாட்டுத் தலங்களில் சிறப்பாக இடம் பெற்றுள்ளவை: 1. பிட்சாடண மூர்த்தி, 2. தட்சிணா மூர்த்தி, 3. நடராச மூர்த்தி என மூன்றாகும். இம் மூர்த்திகள் மூவரும் முறையே சத்முத்திரை (உண்மைக் குறிப்பு), சின் முத்திரை (அறிவுக் குறிப்பு) ஆனந்த முத்திரை (இன்பக் குறிப்பு) ஆகிய மும்முத்திரைகளையும் புலப்படுத்தல் நோக்கத்தக்கது.

## அகப்பொருள் திறம்

தமிழ் என்றாலே சிறப்பாக அகப்பொருளைத்தான் குறிக்கும். பரிபாடலில், "தள்ளாப் பொருள் இயல்பில் தண்டமிழ்" என்று அகப்பொருள் சுட்டப்பெற்றது. தமிழ் மரபினை ஒட்டி ஆரூரர் அகத்துறைப் பாடல்கள் பல அழகுறப் பாடியுள்ளார். தலைவனைப் பிரிந்த தலைவி ஆற்றாமை காரணமாகப் பறவைகளை விளித்துத் தலைவன்பால் தூதுபோய் வரும்படி விண்ணப்பிக்கும் பாடலில் ஆரூரரின் சொல்லாற்றலும் கற்பனைத் திறமும் உணர்ச்சி குன்றாமல் பாத்தொடுக்கும் வன்மையும் ஒருங்கே திகழக் காண்கிறோம்:

"பறக்கும்எம் கிள்ளைகாள்! பாடும்எம் பூவைகாள்!
அறக்கண் என்னத்தகும் அடிகள் ஆரூரரை
மறக்ககில் லாமையும் வளைகள்இல் லாமையும்
உறக்கம்இல் லாமையும் உணர்த்தவல் லீர்களே."

தம்மை ஆட்கொண்ட திருவாரூர் இறைவனை உயிர்த் தலைவனாகப் பாவித்துச் சுந்தரர் கிளிகளையும் பூவைகளையும் தூது போக்குகிறார். பாங்கன், பாங்கி போன்ற வாயில்களை நாடாது பறவைகளை நாடியதன் நோக்கம் அவை ஒன்றைப் பிறிதொன்றாகத் திரித்துக் கூறாமையும் கூறியவற்றையே கூறும் இயல்பும் கொண்டிருத்தலால் என்பர். ஆனால், நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் உரையாசிரியர்கள் ஆகிய பெரியவாச்சான் பிள்ளை முதலியோர் தூதாக அமையும் பறவைகள் ஞானாசிரியர்களைக் குறிப்பன என்றும் அவர்களை உபாயமாகக் கொண்டுதான் ஆன்மாக்கள் பரம்பொருளை அடைதல் கூடும் என்றும் இயம்புதல் இவண் எண்ணுதற்குரியது. பிரிந்திருக்கும் ஆன்மாவின் நிலையினை மூன்று வகையாகச் சுந்தரர் இப் பாடலில் சுட்டுகின்றார். 1. ஆரூர் இறைவனை மறக்க இயலாமை: எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தை பட்டாலும் தாதிமனம் நீர்க் குடத்தில் இருத்தல்போல், முத்தர் மனம் மோனத்தில் இருக்கும்; ஒரு பொழுதும் இறைவனை மறப்பதில்லை. இத்தகைய மன நிலையினை மணிவாசகர்,

"சித்தமெனும் திண்கயிற்றால் திருப்பாதம் கட்டுவித்த
வித்தகனார் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே"

என்று இசைத்தல் காண்க. 2. வளைகள் இல்லாமை: தலைவன் பிரிகிறான் என்று கேள்விப்பட்டதும் பிரிவாற்றாமையால் உடல் மெலிந்து அணிந்திருந்த வளையல் கழலத் தொடங்கியது; என்றும் பிரியேன் என்று கூறியவுடன் மகிழ்ச்சிப் பெருக்கால் உடல் பூரித்ததால் வளையல் உடைந்தது என்று வேடிக்கையாக

ஒரு புலவர் பாடியுள்ளார். மங்கையர்க்கு உரிய மங்கலப் பொருள்களில் தாலிக்கு நிகராக வளையல் கருதத்தக்கது. மறவாதிருந்தும் தலைவன் தன்பால் வாரானேல் பிரிவுத் துயராற்றாது உடல் வற்றி வளை கழல்வதுடன் உயிரும் கழன்றுவிடும் என்ற நோன்புத் திறத்தின் ஆற்றலைச் சுந்தரர் இப் பாடலில் சுட்டுகிறார்.

3. உறக்கம் இல்லாமை: ஒரு பொருளை எய்த எண்ணியவர் மெய் வருத்தம் பாராது, பசி நோக்காது, கண் துஞ்சாது கொண்ட கடமையில் கருத்தூன்றி இருத்தல் உலகியல்பாகும். வள்ளுவர் கூட,

"வாராக்கால் துஞ்சா; வரின்துஞ்சா; ஆயிடை
ஆரஞர் உற்றன கண்"

என்று தலைவியின் அன்புப் பெருக்கின் வெளிப்பாடாகிய உறக்கமின்மையினைக் குறித்துள்ளார். ஆன்மா எப்போதும் விழிப்பு நிலையில்தான் இருத்தல் வேண்டும். வள்ளலார் கூட, "விழித்திரு" என்று கட்டளையிட்டது கருதத்தக்கது. எனவே, ஆன்ம லாபம் பெறுதற்குரிய ஆன்மாவாகிய தலைவியின் மெய்ப்பாடுகளாகிய மூன்றினையும் தமிழ் மரபினை ஒட்டிச் சுந்தரர் அழகுறப் பாடியிருத்தல் உணர்ந்து மகிழத்தக்கது.

அடியார் திறம்

புத்தூர் சடங்கவி சிவாச்சாரியாரின் மகளை மணக்கும் பொருட்டுத் திருமணப் பந்தலில் அமர்ந்திருந்த ஆரூரைத் தடுத்தாட்கொள்ள மறையவன் வடிவில் இறைவன் வந்தான். வந்தவன் ஆண்டவனே என்பதை உணராது,

"ஆசில் அந்தணர்கள் வேறோர் அந்தணர்க் கடிமை ஆதல்
பேசஇன் றுன்னைக் கேட்டோம் பித்தனோ மறையோன்"

என்றார் ஆரூரர் ஆகிய சுந்தரர். பின்னர், மெய்யுணர்வு பொங்கிய நிலையில் அந்தணன் என்ற பிறப்பு நிலையினை நோக்காது அந்தணத் தன்மையுடைய அனைத்துச் சாதியினரையும் தாம் வணங்கும் தெய்வத்திற்கு ஒப்பாகச் சுந்தரர் கருதினார். தொண்டக் குலமே தொழுகுலம், இராசகுலம் என்று வைணவர் கூறுவர். இறைவனுக்கு அன்பு செய்வதைவிட அடியவர்க்கு அன்பு புரிவதே சிறந்தது என்னும் கொள்கை சுந்தரரிடம் மேலோங்கி நின்றது. அதன் விளைவாகத்தான் "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று திருவாரூர் தியாகேசப் பெருமான் அடி எடுத்துக் கொடுக்க, சுந்தரர் திருத்தொண்டர்களின் வரலாற்றுக் குறிப்பு நூலாகிய திருத்தொண்டத்

தொகையினை அருளிச் செய்தார். இந் நூலில் தனியடியார்கள், தொகையடியார்கள் சுட்டப் பெறுகின்றனர். தொன்றுதொட்டு வாழ்ந்து வந்த சிவனருட் செல்வர்களின் வாழ்க்கைக் குறிப்புக் களைத் தன்பால் தாங்கியிருக்கும் அந்நூல் சேக்கிழார் பெரிய புராணம் பாடுதற்கு முதல் நூலாயிற்று. எனவேதான்,

"நேசம் நிறைந்த உள்ளத்தால்
நீலம் நிறைந்த மணிகண்டத்து
ஈசன் அடியார் பெருமையினை
எல்லா உயிரும் தொழ எடுத்துத்
தேசன் உய்யத் திருத்தொண்டத்
தொகைமுன் பணித்த திருவாளன்
வாச மலர்மென் கழல்வணங்க
வந்த பிறப்பை வணங்குவாம்."

என்று சேக்கிழார் பெருமான் உளம் குளிர்ந்து பாடியுள்ளார்.

(தொடரும்)

---

## பாவாணர் ஆராய்ச்சி நூலகத் திறப்புவிழா

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் பெயர் விளங்கும் ஆராய்ச்சி நூலகத் திறப்புவிழா மதுரை, திருநகரில் 26-6-83 ஆம் நாள் நிகழ்ந்தது.

பாவாணர் அவர்களின் திருவுருவப்படமும், கழக ஆட்சியாளர் தாமரைச்செல்வர் திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்களின் திருவுருவப் படமும் நூலகத்தில் திறந்து வைக்கப்பெற்றன.

நூலக நிறுவனர் கழகப் புலவர் திரு. இரா. இளங்குமரன் அவர்கள் வரவேற்புரைத்தார். தமிழ்நாடு வேளாண்துறையமைச்சர் முனைவர் மாண்புமிகு கா. காளிமுத்து அவர்கள், புலவரவர்களின் முயற்சியையும் ஆர்வத்தையும் பாராட்டியுரைத்து நூலகத்திற்குத் தம் முதற் காணிக்கையாக நூல்கள் ஆயிரம் வழங்குவதாகக் கூறித் தொடங்கி வைத்தார். மதுரை காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர் முனைவர் திரு. இராம. தமிழண்ணல் அவர்கள் விழாத் தலைமையேற்றார். பாவலர் திரு. ஆ. முத்துராமலிங்கம், பாவலர் திரு. ம. முத்தரசு ஆகியோர் பாப்பொழிந்தனர். பேரா. திரு. மு. தமிழ்க்குடிமகனார், முனைவர் திரு. வீ. ப. கா. சுந்தரனார், பேரா. திரு. அ. சங்கரவள்ளிநாயகம் ஆகியோர் சிறப்புரையாற்றினர். பேரா. திரு. மு. படிக்கராமு நன்றியுரைத்தார்.

# திரு. வி. க. நூற்றாண்டு விழாவும் அவர் கண்ட 'சபை'யின் முத்து விழாவும்

[சிறுவை. நச்சினார்க்கினியன்.]

சென்னை, இராயப்பேட்டைப் பகுதியில் மோபரீசு சாலை பழமையானது; வளமானது. அப் பகுதியில்தான் திரு. வி. க. அவர்கள் நீண்டகாலம் வாழ்ந்து வந்தார்கள். அவர் கல்வி பயிலும்போது துடிப்புள்ள இளைஞராகவும் ஆங்கிலத்தில் சிறந்த புலமை பெற வேண்டும் என்ற ஆர்வமுடையவராகவும் இருந்தார். மாணவர் சிலருடன் சேர்ந்து "இளைஞர் கல்விக் கழகம்" என்ற அமைப்பினை உருவாக்கினார். இப்பொழுது சீனிவாசப்பெருமாள் சந்நிதித் தெரு என்று வழங்கும் பழைய அம்மன் கோயில் தெருவில் திரு. கந்தசாமி யார் (முதலியார்) வீட்டில் அக் கழகம் அமைந்தது. பின்னர் முத்து முதலித் தெரு, "சங்கர விலாசத்தில்" வளர்ந்து சிறந்தது. "ஆங்கில நாவன்மையால் உலகையே கவரச் செய்தல் வேண்டும்" என்று திரு. வி. க. அவர்கள் கொண்டிருந்த பேரவா வீண் போகவில்லை. பிற்காலத்தில் அண்ணல் காந்தி அடிகளாரின் சொற்பொழிவுகளைத் தமிழில் மொழி பெயர்க்கும் அளவுக்கு ஆற்றல் பெற்றார்.

இளமையில் திரு. வி. க. அவர்கள் கண்ட "இளைஞர் கல்விக் கழகம்" 1903-ஆம் ஆண்டில், "ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜனசபையாக" உருக்கொண்டது. சபையின் தலைவராகச் சைவ சித்தாந்தச் செல்வர் திரு. நா. கதிரைவேற்பிள்ளை அவர்களும் திரு. வி. க. அவர்களின் அண்ணன் திரு. வி. உலகநாத முதலியாரும் செயலாளராக அமைந்தார்கள், சபை முதலில் முத்து முதலித் தெரு, குத்தம்பாக்கம் அப்பாசாமி முதலியார் வீட்டின் ஓர் அறையில் அமைக்கப்பெற்றது. அவ் வறைக்குத் தெருப்பக்கம் பலகணி இல்லை. பலகணி அமைத் தார்கள். இதைப்பற்றித் திரு. வி. க. அவர்கள் கூறுவார். "சிவசங்கரமும் இரத்தினசபாபதியும் யானும் கடப்பாறை கொண்டு சுவரை இடித்தோம். கல் சுமந்தோம், மண் சுமந்தோம், சுண்ணாம்பு சுமந்தோம்" எனப் பெருமைகொள் கிறார், இரவெல்லாம் கண் விழித்துச் செய்த இப் பணியைப் பற்றி!

ஆங்கிலப் பேய்ப் பித்தராய் இருந்து, அப் பேய் தம் ஆசிரியர் திரு. நா. கதிரைவேற் பிள்ளையின் உறவால் விலகி, தமிழ்ப்பற்றும் காதலும் மீதூரப்பெற்றுச் சமயச் செல்வராய் மாறி, கல்லும் மண்ணும், சுண்ணாம்பும் சுமந்தார் என்று அறியும் போது, ஒரு சபை காண்பதற்கு, அங்கே தமிழ் வளர்ப்பதற்குப் பட்ட பாடு, உழைப்பு எவ்வளவு? மெய் சிலிர்ப்பு ஏற்படுகிறது.

*"தங்கமே யனையார் கூடிய ஞான*
*சமரச சுத்தசன் மார்க்கச்*
*சங்கமே கண்டு களிக்கவுஞ் சங்கஞ்*
*சார்திருக் கோயில்கண் டிடவும்"*

என்ற இராமலிங்க அடிகளார் குறிப்பினை மனத்திற் கொண்டார் எனின் அது மிகையாகாது!

திரு. வி. க. அவர்கள் மெற்றிகுலேசன் தேர்வுக்குச் செல்லச் சில காரணங்களால் தடை ஏற்பட்டது. எனவே பள்ளி வாழ்வுக்கு முற்றுப் புள்ளி வைத்துப் பால சுப்பிரமணிய சபையே திரு. வி. க. வாகவும், திரு வி. க வே பாலசுப்பிரமணிய சபையாகவும் விளங்கியது. திரு. வி. க. அவர்கள் காலையில் வழிபாடு செய்வார், மாலை நேரங்களில் நால்வர் நான்மணி மாலை, சோணசைலமாலை முதலிய நூல்களைப் பலர்க்கும் பாடஞ் சொல்லி வந்தார்கள். இங்ஙனம் முருக பக்தராக வளர்ந்த திரு .வி. க. அவர்கள், பின்னாளில் "முருகன் அல்லது அழகு" எனும் நூலினையும் "முருகன் அருள்வேட்டல்" எனும் பாடற் பனுவலினையும் இயற்றிச் சிறந்தார்கள்.

பாலசுப்பிரமணிய பக்தஜனசபை வளர்ந்து சிறப்பதற்கும், ஆண்டுதோறும் விழாக்கள் நடப்பதற்கும் இராயப்பேட்டை இளைஞர்களும் பேட்டைவாழ் பெரியவர்களும் ஒத்துழைப்பும் கூட்டுறவும் தந்து விளங்கினர். அப் பெரியவர்கள் "நம் ஊர்ப் பிள்ளைகள் நல்ல காரியம் செய்கிறார்கள். அவர்கட்குத் துணைபுரியவேண்டியது நம் கடமை" என்பார்களாம். இது திரு. வி. க. காதில் படியும்; சொல்லவா வேண்டும் தொண்டர் திலகத்திற்கு மேலும் பணி செய்ய! சபையில் விழா எடுப்பது பற்றி திரு. வி. க. அவர்களே சொல்வார், "ஆண்டுவிழா முன்னாள் இரவெல்லாம் இராயப்பேட்டை உறங்காது, அன்று சிவராத்திரியே. பொழுது விடிவதற்குள் இராயப்பேட்டை சிவ லோகமாகும். தெருவெல்லாம் தண்ணீர், அடிக்கொரு மகர தோரணம், ஆங்காங்கே பூப்பந்தல், வீடுகளில் வாழையுங் கமுகும் தொங்கும், வாயில்களில் கோலம்; நீர் மோரும் பானகமும் பழமும் கற்கண்டும் சர்க்கரையும் எங்கும் எங்கும்"

என இராயப்பேட்டையை அப்படியே படம் பிடித்துக் காட்டு கிருர். இதனுல் அந்நாளில் மக்களே எவ்வளவு தூரம் தொண்டில் பழக்கி வைத்திருந்தார் இவர் என்பது தெரிகிறதன்ருே!

சபை வளர்ந்தது, "சபைக்கென்று சொந்த நிலைய மொன்று மௌபரீஸ் சாலேயில் அமைந்தது. அதன் பெயர் 'குகானந்த நிலேயம்', அந் நிலேயத்தில் 'நக்கீரர் கழகம்' என்ருெரு கழகம் கண்டு, தமிழ் வகுப்பு நடத்தலானேன்" எனத் தம் வாழ்க்கை வரலாற்றில் கூறி மகிழ்கிருர். சபை ஆண்டு விழாக்கள் பல கண்டது. திரு வி. க. வின் தொண்டிற்குத் தவத்திரு ஞானியார் அடிகள், தவத்திரு பாம்பன்சுவாமிகள், ஆசிரியர் மறைமலே அடிகள், மகாகவி பாரதியார், சிவத்திரு ச. சச்சிதானந்தம் பிள்ளே முதலானேர் துணே நின்ருர்கள்.

இந்தப் பாலசுப்பிரமணிய பக்த ஜன சபை, எத்தனே எத்தனேயோ சித்தாந்த சாத்திர வகுப்புகள், சொற்பொழிவுகள், எத்தனே எத்தனேயோ பெரிய புராண, கந்தபுராணச் சொற் பொழிவுகள், கம்பராமாயணச் சொற்பொழிவுகள், சித்தாந்த சாத்திர ஆய்வுரைகள், தருக்க உரைகள் கண்டு தமிழ் நெஞ்சங்களுக்கெல்லாம் திசைவிளக்கும் திங்களாய்க் காட்சி அளித்து வருகிறது. அறிவுச் செல்வத்தை வாரி வழங்கிய இச் சபையின் வயது இன்று 80 ஆகிறது" முத்து விழா காண இருக்கிறது. சபையினேத் தோற்றுவித்த தமிழ்த்தென்றல் திரு. வி. க. அவர் களின் நூற்ருண்டு விழாவினேயும் இணைத்து நாளிது 1983 ஆகஸ்ட்டுத் திங்கள் 5, 6, 7 ஆம் நாள்களில் விழா நடத்த ஏற்பாடாகி இருக்கிறது. அறிஞர் பெருமக்கள் இதனேப் பெருவிழாவாகத் தமிழ் விழாவாக எடுக்க முயன்று வருகிருர்கள். சபைக்கு ஏற்கெனவே அங்கு "திரு. வி. க. மணிமண்டபம்" ஒன்று அமைந்துவிட்ட காரணத்தால் அங்கேயே மூன்று நாளும் விழா சிறப்பாக நடைபெற இருக்கிறது. மீண்டும் இராயப்பேட்டை திரு. வி. க. கண்ட சிவராத்திரிபோல் விளங்கும்.

திரு. வி. க. சபை அறிஞராகவும் சமயத்திற்கு அப்பாற்பட்ட 'சமரச ஞானி'யாகவும், மிகச் சிறந்த நாட்டுப் பற்ருளராகவும், ஒருமைப்பாட்டின் திருவுருவமாகவும் விளங்கினுர். தமிழ்ப் பேராசிரியர் பதவியை உதறித் தள்ளி "தேசபக்தன்" நாளேட்டின் ஆசிரியராக இருந்தார். "நவசக்தி" என்னும் வார இதழினேப் பல ஆண்டுகள் நடத்தினுர். அவ்விதழ் எழில் மிக்க சுவையான தமிழ்நடையில் நடைபெற்றது. அரசியல் கருத்துகளேப் பொதுமக்கள் புரிந்துகொள்ளும் அழகிய தூய தமிழில் எழுதி மக்களேத் தம் வழி ஈர்த்தார் லெனின்போன்று,

தேச விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டுக் காடு, மலையெனச் சுற்றினர். பத்து மாவட்ட காங்கிரஸ் மாநாடுகளுக்குத் தலைமை ஏற்றார். ஒருமுறை வீட்டுக் காவலில் வைக்கப்பட்டார். காந்தியடிகளைப் போல் எளிய தூய்மையான வாழ்க்கையை மேற்கொண்டார், 42 நூல்களை இயற்றிய அவர் இன்றும் நம்மிடையே புகழுடம்போடு வாழ்கின்றார்.

தன்னல மற்ற இந்திய நாட்டின் வரலாற்று நாயகருக்கு நூற்றாண்டு விழா, அவர் கண்ட சபைக்கு முத்துவிழா! திரு. வி. க.வின் குறிக்கோள்களை—தொண்டுகளை உலகமறியச் செய்வோம்! ஒருமைப்பாட்டை வளர்ப்போம்!

---

## பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு அவர்கள் பெயரால் அறக்கட்டளை நிறுவல்

வரலாற்றுப் பேரறிஞரும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தருமான பேராசிரியர் சை. வே. சிட்டி பாபு, எம் ஏ. அவர்கள் மணி விழா நினைவாக அவர்தம் பெயரில் சென்னைப் பல் கலைக் கழகத்தில் அவருடைய நண்பர்களும் அன்பர்களும் இணைந்து ரு 35,000/— செலுத்தி அறக்கட்டளை ஒவ்றை நிறுவியுள்ளனர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் 18—6—83-இல் நடைபெற்ற விழாவில் அத் தொகைக்குரிய காசோலையைத் தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு. செ. அரங்கநாயகம் அவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர். எம். சாந்தப்பா அவர்களிடம் வழங்கினர். மாண்புமிகு அமைச்சர் அவர்கள் சிட்டிபாபு அவர்களைப் பாராட்டிப் பேசுகையில் தமிழறிஞர்கள் அனைவரும் சிட்டிபாபு அவர்களைப் போலவே தாம் பெற்ற கல்வி தமிழ் நாட்டிற்கே பயன்படும் வகையில் நாட்டுத் தொண்டாற்றவேண்டும் என்று குறிப்பிட்டார். தலைமை தாங்கிய டாக்டர் சாந்தப்பா சிட்டிபாபு அவர்கள் எவ்வாறு தம் கடும் உழைப்பினால் வாழ்க்கையில் படிப்படியாக உயர்ந்து அறிவுப் பணியின் தலை சிறந்த இடமான துணைவேந்தர் பொறுப்பை இருபல்கலைக் கழகங்களில் ஏற்றுச் சிறந்துள்ளாரென்பதைக் குறிப்பிட்டார். சிட்டிபாபு அவர்களின் பல்வேறு வகைக் கல்விப்பணிகளை மாண்பமை நீதிபதி பு. மா. கோகுல கிருட்டிணன் அவர்களும் மதிப்பிற்குரிய செட்டிநாட்டரசர் ராசா சர் முத்தையா செட்டியார் அவர்களும் பாராட்டிப் பேசினர். அறக்கட்டளை நிறுவமுன்வந்த நண்பர்களுக்கும் அன்பர்களுக்கும் சிட்டிபாபு அவர்கள் நன்றி நவின்றார். வணிக வைசியப் பெருமக்கள் முன்னின்று சிறப்புற நடத்திய இவ்விழா சிட்டிபாபு அவர்களின் பணியை நிலைநிறுத்துவதாக அமைந்தது.

இவ் வறக் கட்டளையின் சார்பில் ஆண்டுதோறும் சென்னைப் பல்கலைக் கழகத்தில் வரலாறு, அரசியல் துறைகள்பற்றி அவ் வத்துறைகளில் பேரறிஞர்களைக் கொண்டு ஆய்வுரைகள் நிகழ்த்தப் பெறும்.

# கணவனை இழந்த தனிமகள் புலம்பல்

[சு. சி. கமலையா]

**இன்பமும் துன்பமும்**

இன்பமும் துன்பமும் பகலும் இரவும்போல மனிதனைச் சாடுகின்றன. எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பது பெரியார் விரும்புவது. எனினும் எல்லாம் இன்பமயமாய் வாழ்க்கை அமைவதில்லை. எனவேதான்,

> "இன்பம் பெருக்கி இருளகற்றி எஞ்ஞான்றும்
> துன்பம் தொடர்வறுத்துச் சோதியாய்—அன்பமைத்துச்
> சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
> ஊராகக் கொண்டான் உவந்து"

என்று மாணிக்கவாசகர் இன்பத்தைப் பெருக்குவதும் துன்பத்தைத் துரத்துவதும் இறைவன் செயல் என்று சொன்னார் போலும்! அறியாமையால் துன்பம் விளையலாம். மனிதனை மனிதன் சுரண்டுவதால் மனிதனுக்கு ஏற்படும் துன்பம் கணக்கிலடங்கா. சிலவேளை இயற்கையின் சீற்றத்தால் மனிதன் துன்பத்துக் காளாகிறான்.

சிலப்பதிகாரப் பாத்திரமான கண்ணகியின் வாழ்க்கை இன்பத்தில் தொடங்கித் துன்பத்தில் முடிவுறுகிறது.

> "கயமலர்க் கண்ணியுங் காதற் கொழுநனு
> மயன்விதித் தன்ன மணிக்கா லமளிமிசை"

அமர்ந்து நடத்திய இன்பவாழ்வில் யாண்டு சில கழிந்தன. மாதவிபால் மயக்கந் தீர்ந்து கணவனுடன் மதுரையடைந்த கண்ணகி இனிய இல்லறவாழ்வை எதிர்நோக்கியிருந்தகாலை பேரிடியொன்று காத்திருந்தது. பொற்கொல்லன் சூழ்ச்சியாலும் நற்றிறம் படராக் கொற்கை வேந்தன் மதிகெட்டுரைத்த சொல்லாலும் கோவலன் கொலையுண்டான். ஆய்ச்சியர்பாடியில் கொலைச் செய்தி எட்டியதும் 'கோவலனை அரசியின் சிலம்பைத் திருடிய கள்வனென்று கொலை குறித்தனர்' என்று ஐயை சொன்னாள். 'கொன்றார்கள்' என்று சொன்னால் கண்ணகி அச்செய்தி பொறுக்காமல் உயிரிழக்கக்கூடும் என்பதற்காகவே அவ்வாறு சொன்னாள்.

**'ஒப்பாரி'யின் கதை**

'ஒப்பாரி' என்று இன்று வழக்கிலுள்ள சொல் இழவு வீட்டில் இறந்தவரை நினைந்து உற்றாரும் உறவினரும் மற்றாரு-

மாகிய பெண்கள்கூடி உரக்க அழும்போது துயர இசையுடன் நிகழும் ஒன்றைக் குறிக்கும். 'கடிசொல் இல்லை காலத்துப் படினே' என்ற தொல்காப்பியம் விதித்தபடி அச்சொல் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. பண்டைத்தமிழ் இலக்கியத்தில் இச் சொல் இடம்பெறவில்லை. சங்க நூல்களிலோ சங்கமருவிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலோ மணிமேகலை சிலப்பதி காரக் காப்பியங்களிலோ 'ஒப்பாரி' என்ற சொல் காணப்படாதது.

> ''மக்களே போல்வர் கயவர் அவரன்ன
> ஒப்பாரி யாம்கண்ட தில்'' (1071)

என்ற திருக்குறளில் 'ஒப்பாரி' என்ற வடிவம் இடம் பெறுகிறது. சாமி வேலாயுதம் பிள்ளையின் திருக்குறட் சொல்லடைவு என்ற நூலில் 'ஒப்பாரி' என்பதற்கு நிகர்த்தல் என்று பொருள் கொடுக்கப்பட்டிருக்கிறது. 800, 812, 913 ஆகிய குறட்பாக் களிலுள்ள ஒப்பு என்ற சொல்லுக்கும் 'நிகர்த்தல்' என்பதுவே பொருள். 'ஒப்பு', 'ஒப்பாரி' என்ற இரண்டுமே தொழிற்பெயர். 1071 ஆம் குறளில் வந்துள்ளது 'ஒப்பாரி' என்ற வடிவமே தவிர ஒப்பாரி என்ற சொல்லன்று. இக் குறளில், மக்களே, போல்வர், கயவர், அவர், அன்ன, ஒப்பார், யாம், கண்டது, இல் என்ற ஒன்பது சொற்கள் வந்துள்ளன. ஒப்பார், யாம் என்ற சொற்கள் புணர்ச்சியில் 'ஒப்பாரியாம்' என்று வருகின்றது

## மிண்டின நெருப்பு கிளர்ந்தது

'ஒப்பாரி'யின் கதையொரு புறமிருக்க, சாவைக் கேட்டழு வதும், சாவைப் பார்த்தழுவதும் தொன்றுதொட்டு நிகழ்ந்து வருவனவாம். ஹோமரின் காப்பியங்களிலும் இந்திய நாட்டுக் காப்பியங்களிலும் அழுகைப் பாடல்கள் இடம் பெறுகின்றன. தமிழ்நாட்டில் ஒப்பாரி பெண்கள் சேர்ந்தழுவதுடன் ஒரு பெண் தனிமையில் அழுவதையும் குறிக்கும். ஒப்பாரியில் இழந்தவனை நினைத்துச் சூளுரைத்தலும் இடம்பெறும். 'கொலை குறித்தனரே' என்ற சொற்களைக் கேட்டதுமே கண்ணகி,

> 'பொங்கி யெழுந்தாள் விழுந்தாள் பொழிகதிர்த்
> திங்கள் முகிலோடுஞ் சேணிலங் கொண்டெனச்
> செங்கண் சிவப்ப அழுதாள்'

திங்கள் முகமும் குலைந்த குழலும் நிலத்தில் புரள அழுதாள்; 'எங்கணை?' (எங்குற்றாய்) என்றலறி ஏங்கினாள். இழவு வீட்டில் நெருங்கிய உறவினர் தலைமயிரைக் குலையவிட்டழுவதை இன்றும் பட்டிதொட்டிகளில் காணலாம்.

மனையறம்படுத்த போழ்தில் இன்பக்கீற்றை 'மின்னெழுந்து மின்பரந்து மின்னெடுங்குமாறு' போலக் கண்ட கண்ணகியின் வாழ்வை நகரநம்பி கோவலன் இருளச்செய்து நாட்டியமாதின் இல்லம் நாடினான். கானல்வரிப் பாடலின் விளைவாக மாதவியின் காதல் கானல்நீரை யொக்கும் என்றுணர்ந்த கோவலன் கண்ணகியுடன் புகார் நகரைவிட்டு மதுரை சேர்ந்ததும் தன்வாழ்வு மலர்ந்தது என்று கண்ணகி எண்ணி யிருக்கவேண்டும். மகிழ்ச்சிப்புனல் வற்றிவிட்ட நிலையேற்படவும், மண்டிக்கிடந்த துயரம் கிண்டின நெருப்பைப்போன்று கிளர்ந்து கண்ணகியின் நெஞ்சில் சுடர்விட்டெரிந்தது. 'பழிக்குப் பழி' என்று முகிழ்த்தது, நெடுநாள் கனன்றுகொண்டிருந்த நீறுபூத்த நெருப்பு. கண்ணகியின் நெஞ்சு உலைக்களமாயிற்று.

## கண்ணகியின் கதறலும் மக்கள் குரலும்

கணவனுடலை எரியுண்ணவும் துன்பமுறுவாள் மனைவி. வாழ்க்கைத் துணைவனை இழந்து பலதுறைகளில் நீராடித் துன்பக் கேணியில் உழல்வாளும் உண்டு. கைம்மைத்துறையில் மூழ்கிக் கணவனை நினைந்தேங்கும் பெண்ணும் உண்டு. "அரசன் தவறிழைக்க அன்னவரைப்போல் நானும் இருப்பதா?" என்று கேள்விமேற் கேள்வியைக் கண்ணகி விடுத்தாள். 'இல்லை' என்று எதிர்மறையில் விடை தொக்கிநின்றது. "மன்பதை யலர் தூற்ற மன்னவன் தவறிழைத்தான். மறத்தொடு பொருந்தி அறத்தினின்று பிறழும் மன்னவன் தவறிழைத்தான். செம்மையி னிகந்த கோலையுடைய தென்னவன் தவறிழைத்தான். இருந்தழுவாள் நானொருத்தியோ?" என்று வீறுகொண்ட சொற்களைக் கண்ணகி கொட்டினாள். அறக்கடவுளையும் கண்ணகி சாடுகிறாள்.

> "மறனொடு திரியுங்கோல் மன்னவன் தவறிழைப்ப
> அறனெனும் மடவோய்யா னவலங்கொண் டழிவலோ."
> "காண்பீர்": என்கிறாள்.

> "வாய்வதின் வந்த குரவையின் வந்தீண்டு
> ஆயமடமகளி ரெல்லீருங் கேட்டீமின்"

என்றும் மேலும் ஒருமுறை 'கேளீர்' என்றுரைத்துப் பகலவனைச் சான்றுரைக்கக் கண்ணகி விளித்தாள்.

> "பாய்திரை வேலிப் படுபொருள் நீயறிதி
> காய்கதிர்ச் செல்வனே, கள்வனோ என்கணவன்?"

என்று விளிக்குப்பின் வினாவையும் கண்ணகி தொடுத்தாள்.

"கள்வனோ வல்லன் கருங்கயற்கண் மாதராய்
ஒள்ளெரி யுண்ணுமிவ் வூரென்ற தொருகுரல்"

எரிவிழுங்கும் மதுரையை என்ற குரல் பகலவன் குரலென்றும் அசரீரி என்றும் கொண்டாலும் அதை மக்கள் குரலென்று கொள்ளவே வேண்டும். கொடுங்கோன் மன்னன் வாழும் நாட்டை எரியூட்டுவதன்றி வேறென்ன செய்வது என்று கூறியிருக்க வேண்டும் அங்கு நின்ற பெண்களிலொருத்தி.

இருப்புக்கொள்ளாத கண்ணகி மற்றைச் சிலம்பைக் கையிலேந்தி மதுரைத் தெருக்களிலே மக்கள் மன்றத்தில் தன் குறையைச் சொல்லி அழுதாள்.

"முறைமி லரசன்றன் னூரிருந்த வாழும்
நிறையுடைப் பத்தினிப் பெண்டிர்காள் ஈதொன்று"

எனக் கூவி,

"பட்டேன் படாத துயரம் படுகாலை
உற்றேன் உறாத துறுவனே ஈதொன்று.
கள்வனோ அல்லன் கணவன் என் காற்சிலம்பு
கொள்ளும் விலைப்பொருட்டாற் கொன்றாரே ஈதொன்று
மாதர்த் தகைய மடவார்கண் முன்னரே
காதற் கணவனைக் காண்பனே ஈதொன்று
நீதறு நல்லுரை கேளா தொழிவேனேல்
ஏோதக்க செய்தாளென் றெள்ளல் இதுவொன்று"

என்று முறையிட்டழுதாள்.

'ஈதொன்று' என்று பலமுறை சொல்லித் தன் கணவன், குற்றமற்றவன் என்பதைக் கண்ணகி உறுதிப்படுத்துகிறாள். என்னுடைய இரண்டு சிலம்புகளில் ஒன்று கணவன் விற்பதற்காக எடுத்துச் சென்றது. 'ஈதொன்று-அஃதாவது என் கையிலிருப்பது இரண்டாவதாகும்,' என்று பொருள்படும். 'அந்திப் பொழுதில் எனக்குற்ற துயரம் கொடிது. இனியொன்றுமுண்டோ? (ஈதொன்று)' 'காற்சிலம்பு விலைக்காக என் கணவனைக் கொன்றாரே. ஈதொன்று எண்ணிப்பார்த்தற்குரியது! கொலையுண்ட காதற்கணவனைக் கண்டால், அவன் பேசக் கேட்பவள் நான் என்ற ஒன்றையும் சொல்வேன்.' அப்படி அவன் பேசக் கேட்காவிடில் கள்வன் மனைவி என்று, எள்ளி நகையாடுங்கள் என்ற இதுவொன்றையும் கூறுகிறேன்.' இவ்வாறாக 'ஈதொன்று' என்று பன்முறை சொல்வதுபோன்று இன்றைய ஒப்பாரிப் பாடல்களும் அமைந்துள்ளன.

இன்றைய ஒப்பாரி

தாயை இழந்த பெண்ணொருத்தி ஒப்பாரிவைத்து அழுகிருள். திருநெல்வேலிச் சீமையில் சங்கரநயினர் கோயில் பகுதியிலிருந்து கிடைத்த ஒப்பாரிப் பாட்டைக் கேட்கலாம்.

மாமரத்துக் கீழிருந்து மயில்போற ஒத்தையிலே
மாமரத்துக் காவற்காரன் மறியுங்களென்பான்,
மறிச்சடிக்கச் சொல்வான்.
மாதாவே இங்கிருந்தா மாதாவைச் சாட்சி என்பேன்
மாமரத்தைக் காவலென்பேன்
மாதாவும் இல்லாமே மாமரமும் காவலில்லே
மாதாவும் சாட்சியில்லே.
பூமரத்துக் கீழிருந்து புள்ளே போற ஒத்தையிலே
பூமரத்துக் காவலாளி புடியுங்களென்பான்,
புடிச்சடிக்கச் சொல்வான்.
என்னைப் பெத்த புண்ணியரே இங்கிருந்தா
பூமரமும் காவலென்பேன் புண்ணியர் சாட்சியென்பேன்
என்னைப்பெத்த புண்ணியனர் இல்லாமே பூமரமும்
காவலில்லே புண்ணியனர் சாட்சியில்லே.

இந்த ஒப்பாரியிலே சில சொற்றொடர்கள் மீண்டும் வந்து தாயை நினைந்து ஏங்கி அழும் பெண்ணின் துயரத்தை மீதூரச் செய்கிறது.

தென்னவன் கொற்றம் சிதைந்தது

மதுரை மக்களின் தீர்ப்பு கண்ணகிக்கு ஆதரவாயமைந்தது.

''களையாத துன்பமிக் காரிகைக்குக் காட்டி
வளையாத செங்கோல் வளைந்த திதுவென்கொல்
தென்னவன் கொற்றஞ் சிதைந்த திதுவென்கொல்
மண்குளிரச்செய்யு மறவேல் நெடுந்தகை
தண்குடை வெம்மை விளைத்த திதுவென் கொல்''

என்றெல்லாம் மக்கள் ஏங்கினர். 'தெய்வமேறினள் போலும் இந்தப் பெருந்தெய்வத்துக் குற்ற துயரம் எத்தீங்கைக் கொணருமோ' என்றும் மதுரைவாழ் மக்கள் அஞ்சினர்.

அவலக்கும் அழுகையும் வெகுளியும்

கொலைக்களம் சேர்ந்த கண்ணகி துயரமேலீட்டால் கணவன் உடலைக்கண்டு, ''எனக்குண்டான துயரம் கண்டும் என்னைச் சார்ந்த இடரை நீர் ஏன் நினைக்கின்றதில்லை,'' என்று கண்ணகி கோபித்துக்கொள்கிருள். 'பொன்னுறு நறுமேனி பொடியாடிக் கிடப்பதோ? உண்மையறியாத மக்கள் இவள் செய்த

தீவினை யாதோ? என்றெண்ணுரோ!' என்றும் அவள் வினவு கிருள். கதறும் கண்ணகியின் அழுகைக் குரல் இதோ!

"யாருமில் மருண்மாலை யிடருறு கதியேன்முன்
தார்மலி மணிமார்பந் தரைமூழ்கிக் கிடப்பதோ!
பார்மிகு பழிதூற்றப் பாண்டியன் தவறிழைப்ப
ஈர்வதோர் வினைகாணு இதுவென உரையாரோ!
கண்பொழி புனல்சோருங் கடுவினை யுடையேன்முன்
புண்பொழி குருதியிராய்ப் பொடியாடிக்கிடப்பதோ!
மன்பதை பழிதூற்ற மன்னவன் தவறிழைப்ப
உண்பதோர் வினைகாணு இதுவென உரையாரோ!"

[யாருமில்—துணையொருவருமில்லா; ஈர்வதோர் வினை—வெட்டுவதோர் வினை]

கண்ணகி கோபித்துக்கொள்வதை 'அழுகையைச் சார்ந்த வெகுளி' என்பார் அடியார்க்கு நல்லார். கணவனையிழந்த மனைவி தனிமகளாய்ப் புலம்புவதை முதுபாலை என்றும் அவர் உரைப்பார். அவர் காட்டும் மேற்கோளாவது :

"நனிமிகு சுரத்திடைக் கணவனையிழந்த,
தனிமகள் புலம்பன் முதுபாலை யாகும்."

கண்ணகியின் அழுகை மீண்டும் சீறுகிறது.

"பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்
கொண்ட கொழுநர் உறுகுறை தாங்குறூஉம்
பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்"

"கொண்ட கொழுநர் குறையைத் தாங்கிக்கொள்ளும் கற்புடைப் பெண்டிர் இம் மதுரையில் உண்டா?" என்ற கண்ணகியின் வினு அவள்பட்ட அவலத்தையே உரைக்கின்றதன்ரூே! "கூடற்பதியில் சான்ரூேரும் உண்டா? ஏன், தெய்வம்தான் உண்டா?" என்றும் கேட்டழுதாள். கணவன் உடலைக் கண்ணகி தழுவவும், இறந்த கோவலன்,

"நின்ருனெழுந்து 'நிறைமதி வாண்முகம்
கன்றியது' என்றவள் கண்ணீர் கையால்"

மாற்றினுன். அழுதேங்கி நிலத்தில் வீழ்ந்த கண்ணகி கணவன் திருவடியைப்பற்றவும் பல்லமரர் சூழக் கோவலன் வானுலகம் சென்ருன் என்று இளங்கோவடிகள் பாடுகிருர்.

அழுகையும் சினமும் ஒன்ருேடொன்று மோதிக்கொண்டு கண்ணகியை வாட்டின.

"காய்சினந் தணிந்தன்றிக் கணவனைக் கைகூடேன்
தீவேந்தன் தனைக்கண்டித் திறங்கேட்பல் யான்"

என்ருள். கண்ணீரைத் துடைத்துக்கொண்டு கண்ணகி,

"சென்ருள் அரசன் செழுங்கோயில் வாயில்முன்."

———

# தொல்காப்பியச் சிந்தனை*

[செஞ்சொற்கொண்டல், தமிழாகரர்
டாக்டர் சொ. சிங்காரவேலன் எம்.ஏ.,பிஎச்.டி.]
[தமிழ்ப் பேராசிரியர், அ.வ. அ. கல்லூரி, மயிலாடுதுறை]

"எப்படிப் பேசுவது" என்றே சிலர்க்குப் புரிவதில்லை. எப்போது எப்படிப் பேசவேண்டும் என்று அறிந்து வைத்திருத்தல் எல்லோர்க்கும் இயலாத செயலாகவே உள்ளது; தொல்காப்பியர் இதற்கும் வழிகாட்டுகிறார் :

சொல்லவந்ததைச் சுருக்கமாகச் சொல்ல வேண்டும்; சுருக்கமாகச் சொல்வதாக எண்ணிக்கொண்டு விளங்காமற் சொல்லிவிடக்கூடாது; கூறுவது தெளிவாக விளங்கவேண்டும்; அதே வேளையில் அது சுருக்கமாகவும் இருக்கவேண்டும். சொல்லியதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டிருப்பார்கள் சிலர்; அது கூறியது கூறல் என்னும் குற்றம். முன்னே ஒன்று சொல்லிவைத்துப் பின்னே அதற்கு மாறுபட்ட ஒன்றைச் சொல்லி மாட்டிக்கொண்டு விழிப்பார்கள் சிலர். இன்றைய இலக்கிய ஆராய்ச்சி வடிவங்களில், புகழ்பெற்ற ஒரு வகையாக விளங்கும் பட்டிமன்றங்களில் வாதிடவரும் சிலர் இவ்வாறு வம்பிலே சிக்கிக்கொண்டு விழிப்பது அனைவரும் அறிந்தது. சிலர் பொருளற்ற வீண் சொற்களைப் பேசியே பொழுது கழிப்பர். அவர்களுக்கு எல்லாம் இந்தப் பிறவியின் நோக்கமே, 'பயனற்ற சொற்களைப்பேசி விநாடிகளை வீணடித்தல்' என்ற ஒன்றுதான்! சிலர் பேசும் சொற்றொடர்கள், மயக்கத்தை உள்ளபடியே வரவழைத்துவிடும். 'பொருள் இதுவோ அதுவோ' என்று கேட்போர் மயங்கும்படி பேசிவிடுவர். அவர்களுள் பழித்து ஒதுக்கப்பட்ட - அறிவுடையோரால் புறக்கணிக்கப்பட்ட சொற்களைப் பேசித் தம் அறியாமையைத் தம்பட்டம் அடித்து வெளிப்படுத்திக் கொள்வோரும் உண்டு.

நூலுக்கு இத்தகைய குற்றங்கள் வராதவாறு காக்க வேண்டும் என்று தொல்காப்பியர் கூறுவது, ஆய்வு நூலுக்குச் சொல்லப்பட்ட நெறி முறைகளே ஆயினும், பேசுவோர்க்கு எப்படிப் பேசவேண்டும் என்றும் அறிவுறுத்துகின்றது.

திருமண விழாவிற்குச் சென்று வாழ்த்திப் பேசுவோர் மங்கலமில்லாத சொற்களையோ, மேற்கோள்களையோ விளக்கிப் பேசிக் கேட்போர் முகஞ்சுளிக்கச் செய்துவிடக் கூடாது

---

* 16-1-83 அன்று அனைத்திந்திய வானொலியின் திருச்சிராப்பள்ளி நிலையத்தினின்று ஆற்றிய உரை.

அல்லவா? அவ்வாறே கையறுநிலைக் கூட்டத்திற் கலந்து கொள்ளச் செல்வோர், நகைச்சுவைத் துணுக்குகளைக் கலந்து பேசி, அந்தத் துன்பச் சூழ்நிலைக்குப் பொருந்தாதபடி பேசி, 'அறியாதவர்' என்ற பட்டத்தைப் பெற்றுக்கொள்ளக் கூடாது.

தொல்காப்பியர், ஒரு பெண் பேசும் மொழிக்கு எவ்வளவு இலக்கணம் வகுக்கின்றார், கேளுங்கள் :

''அருள் முந்துறுத்த அன்பு பொதி கிளவி'' (கற்பியல்-20)

அருளும் அன்பும் நிறைந்த சொற்களையே ஒரு பெண் பேச வேண்டும் என்கின்றார்; தாய்மைப் பண்பு நிறைந்தவர்கள் பெண்கள் அல்லவா? அப் பண்பிற்கு மாறுபட்ட சொற்களைத் தாய்மார்களின் வாய்கள் வெளிப்படுத்தக்கூடாது என்பது அவர் கருத்து. இன்று குடிநீர்க் குழாய்களில், கிணற்றடிகளில் மகளிர் பேசும் பேச்சுகள் எவ்வளவு தரம் கெட்டவையாக இருக்கின்றன! அவர்களுக்குத் தொல்காப்பியர் தரும் அறிவுரையாக இதனைக் கொள்ளலாம்.

தலைவி கூறும் கூற்றுக்கள் அவள் மனத்தின் அழகைப் புலப்படுத்துவனவாக அமைதல் வேண்டும் என்பார்: ''அறம் புரி நெஞ்சமொடு'' (கற்பியல்-6) என்பார்; ''எதிர் பெய்து மறுத்த ஈரம்'' என்பார்; புரைதீர்கிளவி (களவியல்-23) என்பார்; புரை என்றால் குற்றம் என்பது பொருள். குற்றமற்ற சொற்களே குலப்பெண் கூறத் தகுந்தவை என்பது குறிப்பு. ''செங்கடு மொழி'' (நேர்மையான கடிய சொல்) என்றும் கூறுவதுண்டு. (களவியல் 23).

அடக்கம், மன அமைதி, நேர்மை, தக்கனவற்றைக் கூறுவது, அருமைப்பாடு—ஆகியவை பெண்பாலோர்க்கு உரிய நல்லியல்புகள் என்பர் பிறிதோரிடத்து :

''செறிவும், நிறைவும், செம்மையும், செப்பும்,
அறிவும் அருமையும் பெண்பா லான'' (பொருளியல்-15)

இன்றைய புதுமைப் பெண்கள், பாரதி காட்டிய பாதையில் வளர்ந்துவரும் மகளிர் சமுதாயம், அறிந்து பின்பற்றத்தக்க பண்புகள் அல்லவா இவை? அடக்கம் கோழைத்தன்மை ஆகாது; மன அமைதி செயலாற்றத் தடையாகாது; நேர்மை வாழ்வின் முன்னேற்றத்திற்கு வழித் தடையாய் இருந்துவிடாது; தகுவன சொல்வது என்பது அநீதிகண்ட இடத்து, சிறுமைகண்டு பொங்காமை வேண்டும் என்று ஆகிவிடாது. ஆகவே, தொல் காப்பியர் கூறும் இப் பெண்பாற்பண்புகள் அனைத்தும் இன்றைய புதுமைப் பெண்களுக்கும் வேண்டும் என்பதே இங்குக் குறிக்கத் தக்க மெய்ம்மை ஆகும். இவ்வாறே ஓர் ஆண்மகன் பெருந்

தன்மையும், அறிவும் உடையவனாக இருத்தல் வேண்டும் என்றும் தொல்காப்பியர் கூறுவது நோக்கத்தக்கது:

'பெருமையும் உரனும் ஆடூஉ மேன'' (களவியல்-7)

இத்தகைய ஆடவரும் பெண்டிரும்பற்றித் தொலகாப்பியர் பொருளதிகாரம் கூறும் சிந்தனைகள், இன்றைய ஆடவரும் பெண்டிரும் அறிந்து பின்பற்றத்தக்க புதுமை உடையனவாகவே பொலிகின்றன.

திருமணம் செய்யும்போது, கணவன் மனைவி இருவர்க்கும் இடையே சில ஒப்புகள்—பொருத்தங்கள் இருக்கின்றனவா என்று ஒப்பிட்டு ஆராய்ந்து செய்யலாம். தொல்காப்பியர் கூறும் பொருத்தங்கள் இவை:

''பிறப்பே, குடிமை, ஆண்மை, ஆண்டொடு
உருவு, நிறுத்த காம வாயில்,
நிறையே, அருளே, உணர்வொடு, திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே''

(மெய்ப்பாட்டியல்-25)

பஞ்சாங்கத்திற் கண்ட 'தசப் பொருத்தங்கள்' போலவே, தொல்காப்பியர் கூறுவதும் பத்துவகைப் பொருத்தங்களாகவே அமைவது வியப்பாக இல்லையா?

இன்பம் சிறக்கப் பேசும்போது சிறந்த உவமைகளைக் கையாள வேண்டும் என்பது தொல்காப்பியர் ஆணை. சிறந்த உவமைகள் என்று கூறும்போது, ஆழ்ந்த பொருள்களை உள்ளடக்கிய உவமைகள் எனலாம்; அவற்றை 'உள்ளுறை உவமைகள்' என்பர். குறிப்பழகு வாய்ந்த அத்தகைய பேச்சுகள் இலக்கிய நயம் பொதிந்து விளங்கும் அல்லவா? ''கரும்புக்காகப் பண்படுத்தப்பட்டு, நன்கு வளர்க்கப்பட்ட பாத்தியிலே பூத்த ஆம்பல்பூ, அங்கு வந்த வண்டுகளின் பசியைப் போக்கித் தேனை வழங்கும் ஊருக்குத் தலைவனே!'' என்று சங்க இலக்கியத்திலே ஒரு தலைவி பேசுவதாக ஒரு பாட்டு. கரும்பிற்கு என்று ஆக்கப்பட்ட பாத்தியிலே இடையிலே புகுந்து ஆம்பல் பூத்ததுபோல, எமக்கென்று ஆக்கப்பட்ட இல்வாழ்க்கையிலே வேறு ஒரு பெண் குறுக்கிட்டாள். வண்டிற்குத் தேனை வழங்கும் அல்லிப்பூப் போலத் தலைவனுக்கு இன்பம் நல்கினாள் என்பது குறிப்பு. நயமாகவும் நாகரிகமாகவும் தலைவனிடம் ஒரு தலைவி இடித்துக்கூறும் பேச்சு இது. இவ்வாறு உள்ளுறை ததும்பும் பேச்சினால் இலக்கிய நயம் உரையாடலிலும் கொட்டும். வறட்சியான பேச்சுகளைத்தவிர்த்து, அருளும், அன்பும், நிரம்பிய நாகரிகமிக்க பேச்சு முறைகளை நாமும் இனிக் கையாள்வோம், பிறர்க்கும் இன்பம் ஊட்டுவோம்!

———

# கன்னடத்தில் மானக்கஞ்சாற நாயனுர்

[பி. எல். சாமி, ஐ.ஏ.எசு.,]

கவிகர்னரசாயனம் (Kavikarnarasayanam) என்ற நூலானது அண்மையில் மைசூரிலிருந்து வெளிவந்துள்ளது. இந்நூலை வடமொழியில் எழுதியவர் சடாக்சரிசா (Sadaksarisa) என்ற கன்னடர் ஆவார். இந்த வடமொழி நூலில் பெரிய புராணத்தில் கூறப்பட்டுள்ள மானக்கஞ்சாற நாயனுரின் வரலாறு காணப்படுகின்றது.

குசுமபுரா (Kusumapura) என்னும் ஊரில் மானக்கஞ்சாரு (Manakanjara) எனும் சிறந்த சிவபக்தர் ஒருவர் இருந்தார். அவர் நன்கு கற்றறிந்தவரும், சிறந்த கொடையாளியுமாவார். தம் மகளான சோமப்பிரபா என்பவருக்குத் திருமணம் முடிக்க எண்ணி அவளுக்கு ஒரு சிறந்த மணமகனைக் காண்பிக்குமாறு சிவபெருமானிடம் வேண்டினுர். சிவபெருமானும் அவரது பக்திக்கு இணங்கி, "சுந்தரசோழன் என்னும் பக்திமிக்க அரசனுக்கு உன் மகளைத் திருமணம் முடித்து வை'' என்று கட்டளையிட்டார். அவரும் சிவபெருமானின் கட்டளைக்குப் பணிந்து தம் அமைச்சர் வாயிலாகத் தம்முடைய நாட்டிற்கு அரசன் சுந்தரசோழனை வரவழைத்துத் தம் மகளைத் திருமணம் செய்து கொடுத்தார். சிவபெருமான் மானக்கஞ்சாறருடைய பக்தியைச் சோதிக்க எண்ணி ஒருநாள் சைவத்துறவியைப் போல் அவரிடம் வந்தார். மானக்கஞ்சாறர் துறவியிடம் யாது வேண்டுமென்று வினவினுர். அதற்குத் துறவி, 'நீ உன் மகளின் கூந்தலை எனக்கு வெட்டித்தர வேண்டும்' என்று கேட்டார். உடனே மானக்கஞ்சாறர் சிறிதும் தயக்கமின்றி, தம் மகள் புதிதாகத் திருமணமானவள் என்றும் பார்க்காமல் அவளது கூந்தலை வெட்டித் துறவிக்குக் கொடுத்தார். சிவபெருமான் மானக்கஞ்சாறரது பக்தியை மெச்சித் தமது உண்மை உருவத்துடன் காட்சியளித்து, 'நீ விரும்பும் வரத்தைக் கேட்கலாம்' என்று கூறி அவருடைய மகளின் தலையில் கையை வைத்தார். அவளது தலையில்சிவபெருமானது கை பட்டதும் தலையில் கூந்தல் முன்பு இருந்ததுபோன்ற இயற்கை நிலையை அடைந்தது. சிவபெருமான் மேலும் பின்வருமாறு சொன்னுர்: "சிறுத்தொண்டர் தம் மகனை, நான் கேட்டதும் கொடுத்தார்; சிந்து பல்லாலா தம் மனைவியையே கொடுத்தார்; நீவிரும், புதிதாகத் திருமணம் முடித்த உம் மகளின் கூந்தலைக் கொடுத்தீர்'' என்றுர். சிவபெருமானிடம் அடியார்கள் கொண்டிருக்கும் பக்தியை இது காட்டுகின்றது. மானக்கஞ்சாறர் இவ்வுலக இன்பங்களை அனுபவிக்க

விரும்பவில்லை. அவர் எப்போதும் சிவபெருமானது பாதாரவிந் தங்களையே பற்றிக்கொள்ள விரும்பி, சிவனை வேண்டிக்கொண் டார். அதற்கும் சிவபெருமான் அருள் புரிந்தார்.

சேக்கிழார் அடிகள் திருவாய் மலர்ந்தருளிய பன்னிரண்டாந் திருமுறையாகிய பெரியபுராணம் என்று வழங்கப்பட்டு வரும், திருத்தொண்டர் புராணத்தில் வரும் மானக்கஞ்சாற நாயனரின் கதை கன்னட நாட்டில் வழங்கி வந்துள்ளது என்பது நமக்கு வியப்பைத் தருகின்றது. இதில் மானக்கஞ்சாற நாயனரது கதையின் கரு இருந்தாலும் கதையின் உருமாறியுள்ளது. கஞ்சாறு என்னும் திருநகரில் மானக்கஞ்சாறர் இருந்ததாகவும் அவர் வேளாளர் மரபைச் சேர்ந்தவர் என்றும் பெரியபுராணத்தி லிருந்து தெரிகின்றது. இந் நூலில் இவருடைய மகளின் பெயர் குறிப்பிடப்படவில்லை. ஆனல் கன்னட நாட்டில் வழங்கிய மானக்கஞ்சாறர் கதையிலிருந்து அவரது ஊர் 'குசுமபுரா' என்பது தும், மகளின் பெயர் 'சோமப்பிரபா' என்பதும் தெரியவருகின்றன. இவர்தம் மகளை ஏயர்கோன் கலிக்காம நாயனருக்குத் திருமணம் செய்து வைத்ததாகப் பெரியபுராணம் கூறுகின்றது. ஆனல் கன்னட நாட்டில் இந்தக் கதை வேறுமுறையாகக் கூறப்பட் டுள்ளது. மானக்கஞ்சாறர், தம் மகளுக்குத் தகுந்த கணவனைத் தேர்ந்தெடுத்துத் தருமாறு சிவபெருமானிடம் வேண்டிக்கொண்ட போது, சிவபெருமான், சுந்தரசோழன் என்னும் மன்னனுக்குத் திருமணம் செய்து வைக்கும்படி பணித்ததாகக் கன்னடநாட்டுக் கதையில் சொல்லப்பட்டிருக்கிறது. பெரியபுராணத்திற்கும் கன்னடக் கதைக்கும் மாற்றமுள்ளது. படைத்தலைவராக இருக்கத் தகுதி பெற்ற மரபான வேளாளர் மரபிலே ஏயர்கோன் கலிக்காம நாயனர் தோன்றியவர். ஆனல் கன்னடக் கதையின்படி சுந்தரசோழன் என்ற அரசனுக்கே மானக்கஞ்சாறர் தம் மகளை மணம் செய்து வைத்தார் என்று கூறப்பட்டுள்ளது. இக் கதையில் கூறப்பட்டிருக்கும் சுந்தரசோழர் யாரென்று தெரியவில்லை. சுந்தரர் சிவபிரானையே பரவையாரிடம் தூதனுப்பியதைக் கேட்டு ஏயர்கோன் கலிக்காம நாயனர் சுந்தரர் மேல் சினமுற்றிருந்தார். இதையறிந்த சுந்தரர் இறைவனை வேண்ட, இறைவன் ஏயர் கோன் கலிக்காம நாயனருக்குச் சூலைநோய் அளித்துச் சுந்தர ரால் தீருமென்றார். அதை ஏயர்கோன் கலிக்காம நாயனர் விரும்பவில்லை. சிவபெருமான் பணித்தும் சினம் மாருது தற்கொலை செய்து கொண்டார். இவர் சிவபெருமானல் மீண்டும் உயிர்பெற்றுச் சுந்தரருக்குத் தோழரானர். கன்னடக் கதையில் வரும் சுந்தரச்சோழர், சுந்தரமூர்த்தி நாயனரைச் சோழ மன்ன ரோடு இணைத்துக் கட்டிய பிற்காலக்கதை. இது கன்னட நாட்டில்

வழங்கியிருப்பது தெரிகின்றது. ஆயினும் கதையின் உட்கரு பெரியபுராணத்திலிருந்து மாறவில்லை.

கன்னடத்திலுள்ள வீரசைவ நெறியில் பெரிய புராணக் கதைகள் மாறியும் திரிந்தும் வழங்குவதைக் காணலாம். அவ்வாறு திரிந்த புராணக் கதையே மானக்கஞ்சாறர் கதையாகும். மற்றும் சிவபெருமான் மானக்கஞ்சாறருடைய பக்தியால் பெரிதும் மகிழ்ந்தமையால், "சிறுத்தொண்டர் மகனைக் கொடுத்தார்; சிந்துபெல்லாளர் தம் மனைவியைக் கொடுத்தார்; நீ உனது மகளின் கூந்தலைக் கொடுத்தாய்" என்று அவரை மெச்சியது கூறப்பட்டுள்ளது. சிறுத்தொண்டர் கதை அப்படியே வழங்கினும் இயற்பகை நாயனர் தம் மனைவியைக் கொடுத்த கதை பெயர் மாற்றத்துடன் வழங்குகின்றது. இயற்பகை நாயனர் வணிகர் மரபைச் சேர்ந்தவரென்று பெரியபுராணத்தில் கூறப்பட்டுள்ளது. ஆனல் கன்னடக் கதையில் அவர் வேளாளர் மரபைச் சேர்ந்தவர் என்று குறிக்க, சிந்து பெல்லாளர் என்ற பெயர் இயற்பகை நாயனர் என்கிற பெயருக்குப் பதிலாக வழங்கியிருப்பதைக் காணலாம். பல்லாளர் என்ற பெயர் வேளாளர் என்ற பெயரின் மாற்றமாகும்.

காரைக்கால் அம்மையாரின் கதையும் கன்னடத்தில் வழங்குவதாகத் தெரிகின்றது. கன்னடத்தில் அவரைக் காரைக்கால் பேய் என்று அழைப்பதாகத் தெரிகின்றது. ஒரு காலத்தில் 63 நாயன்மார்களின் கதைகள் கன்னடத்தில் வீரசைவ மதத்தில் வழங்கியிருக்கலாம். ஆனல் இப்போது கிடைக்கும் பெயர்களிலிருந்து மானக்கஞ்சாறர், சிறுத்தொண்டர், இயற்பகை ஆகிய நாயன்மார்களின் கதை கன்னட நாட்டில் வழங்கியிருப்பது தெரிகின்றது. அதுபோன்றே ஏயர்கோன் கலிக்காம நாயனரது புராணக் கதையும் வழங்கியிருக்கலாம்.

இதுகாறும் கூறியவற்றிலிருந்து கன்னட நாட்டில் வழங்கும் சிவபெருமானின் திருவிளையாடற்புராணக் கதைகளை ஆராய்ந்தால் பல உண்மைகள் தெரியவரும். 'திரிசஷ்டிஸலாஹர' என்ற வடமொழியிலுள்ள நூலை மொழிபெயர்த்துப் பெரியபுராணத்தைச் சேக்கிழார் இயற்றினர் என்பது ஒரு சிலரின் கருத்து. கன்னட நாட்டில் வடமொழியில் மானக்கஞ்சாற நாயனரின் கதை பெயர் மாறி வழங்கியதிலிருந்து தமிழக நாயனர்களின் கதை தமிழிலிருந்துதான் வடமொழிக்குச் சென்றிருக்கின்றன என்பதே உண்மையானதாகும். சைவ நாயன்மார்களைப்பற்றிக் கன்னடத்தில் வழங்கும் செய்திகளைச் சேகரித்தால் பல உண்மைகளை மேலும் நாம் தெரிந்துகொள்ள வாய்ப்பாக அமையும்.

———

# தலைமைச் செயலர் திரவியம் மறைவு

தமிழக அரசின் தலைமைச் செயலர் திரு. கா. திரவியம் அவர்கள் 13—6—83-ல் காலமானார்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம். திரு. திரவியம் அவர்கள் நெல்லைமாவட்டம் தூத்துக்குடியில் 1925-இல் பிறந்தார். இவர்தம் தந்தையார் காந்திமதிநாத பிள்ளை இந்தியாவின் விடுதலைப் போரில் ஈடுபட்டவர். தந்தையாரைப் போலவே மைந்தர் திரவியமும் தமது 16 ஆம் அகவையிலேயே விடுதலைப் போரில் ஈடுபட்டார். 1941 ல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நடுநிலை வகுப்பில் படிக்கும்போது விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு அதன் விளைவாக 6 மாதம் சிறை ஒறுப்பினையும் ஏற்றார். விடுதலைபெற்ற



பின் கல்வியைத் தொடர்ந்து பி. ஏ. ஆனர்சு தேர்வு பெற்றார். இவர் தமிழிலும் ஆங்கிலத்திலும் நன்கு புலமை பெற்றவர். 1956 இல் அரசுப்பணியில் சேர்ந்த இவர் 1959 இல் ஐ. ஏ. எசு அதிகாரியானார். செங்கற்பட்டு, மதுரை ஆகிய மாவட்டங்களின் அதிகாரியாகவும், சிற்றூர் வளர்ச்சித்துறை இயக்குநராகவும், நுகர்பொருள் வழங்கு துறை இயக்குநராகவும், உணவுத்துறை, கல்வித்துறைச் செயலாளராகவும், அரசு இரண்டாவது செயலாளராகவும் பணியாற்றி 1981 ஆகஃச்டுத் திங்களில் அரசு தலைமைச் செயலாளர் ஆனார்.

இவர் பல புத்தகங்கள் எழுதியுள்ளார். இவர் எழுதிய 'தேசியம் வளர்த்த தமிழ்' என்ற நூல் மேனிலை வகுப்பு மாணவர்க்குத் துணைப்பாட நூலாக வைக்கப்பட்டுள்ளது. இவருக்குப் பகுத்தறிவு இயக்கத்தில் பெரிதும் ஈடுபாடுண்டு. மறைந்த திரவியம் அவர்களின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

———

# பண்ணாய்வு செய்யும் முறைகள்

## 1. சாதாரிப் பண் எது?

[பேராசிரியர் வீ. ப. கா. சுந்தரம்,
தமிழிசை ஆய்வாளர்—மதுரை]

(செல்வி சிலம்பு-இள, பரல் ௪௦. ௪௫௫ ஆம் பக்கத் தொடர்ச்சி)

இதற்குரிய சுவரங்கள் குரல், வன்துத்தம், வன்கைக்கிளை, இளி, வல்விளரி (ச ரி க ப த) எனக் கண்டு இது மோகனம் எனக் கூறியுள்ளார். ஆனால் இவர் முல்லைப்பாணியே சாதாரி எனக் கூறவில்லை. மேலும் இளங்கோவடிகள் முல்லைப் பண்ணுக்குரிய 4 சுவரங்களே கூறியுள்ளார் என்றும், ஐந்தாம் சுவரத்தைக் கூறாமல் விட்டுவிட்டார், அதனை உய்த்துணர விட்டு விட்டார் என்றும் இராமநாதர் பண்ணை விளக்கியுள்ளார். ஆனால் இளங்கோ—முல்லைப்பாணிக்குரிய ஐந்து கோவை களையுமே முற்றமுடிய மொழிந்து விளக்கியுள்ளார் என்பதை இக் கட்டுரையில் காணலாம். அது முதன்முறை இங்கு படத்துடன் விளக்கப்படுகிறது.

முல்லைப்பாணியின் கோவைகள் (சுவரங்கள்):

இளங்கோ ஒரு வெண்பாவில் முல்லைப்பாணியின் கோவைகள் ஐந்தையும் விளக்கியுள்ளமை வருமாறு :

... ... ... பாடுதும்
முல்லைத்தீம் பாணியென் றாள்; எனக்

(—வெண்பா—)

(1) குரன்மந்த மாக (2) இளிசம னாக
(3) வரன்முறையே துத்தம் வலியாக—(4) உரனிலா
மந்தம் விளரி பிடிப்பாள் அவள்நட்பின்
பின்றையைப் பாட்டெடுப் பாள்.''

—(சிலப். 17 : 17 - 18)

இப் பாடலில் கூறியன ஐந்து கோவைகள். பதவுரை வருமாறு: (1) குரன் மந்தமாக = குரல் (சட்சம்) என்பவள் அடிப்படையாக நிற்க. (2) பின், இளி சமனாகப் பிடித்தாள் = பின்னர் குரல் என்பவள் தனக்கு இணை உறவுக் கோவையாக இளியைப் பிடித்தாள். (3) வரன் முறையே துத்தம் வலியாகப் பிடித்தாள் = முற்கூறிய குரலிளி முறையில் (ச-ப. முறையில்) இளி ('ப') என்பவள் தனக்கு இணை உறவுக் கோவையாக வன்துத்தத்தை (சதுச்ருதி ரிடபத்தை) வலிமண்டிலத்தில் (தாரதாயியில்) பிடித்தாள். (4) உரனில்லா மந்தம் விளரி பிடிப்பாள் = மந்தத்தாயிக்குத் துத்தம் என்பவள் வந்து, தனக்கு இணை உறவுக் கோவையாக வல்விளரியைப் (ச. தை) பிடிப்பாள். (5) பின் அவள் நட்பு பிடிப்பாள் = பின்னர் குரல் என்ற

முதலில் கூறிய அவள் தனக்குரிய நட்பு உறவுக் கோவையாகிய வன்கைக்கிளையைப் பிடிப்பாள். (6) பின்று-ஐயைப் பாட்டெடுப்பாள் = இவ்வாறு ஐந்து கோவைகளைப் பிடித்து அமைத்துக் கொண்ட பின்று—ஐயனாகிய கண்ணனைப்பற்றிய பாட்டை எடுப்பாள்.

(விளக்கக் குறிப்புகள் :—'பிடிப்பாள்' என்ற சொல்லை அனைத்து இடத்திலும் கொண்டு கூட்டுக. இணை உறவுக் கோவை அல்லது சமன் உறவுக் கோவை என்பது—'ச-ப' முறைச் சுரங்கள் : நின்ற நரம்புக்குமேல் (சுவரத்திற்கு) "ஏழாம் நரம்பு இணை" என்பது கல்லாட நூலுட் கண்ட மேற்கோள் செய்முறை :

| கு. | து. து. | கை. கை. | உ. உ. | இ. | |
|---|---|---|---|---|---|
| ச. | ரி. ரி. | க. க. | ம. ம. | ப. | ='ஏழாம் நரம்பு இணை' |
| 0 | 1 2 | 3 4 | 5 6 | 7 | |

குரலினின்றும் ஐந்து இணை நரம்புகளை ஒன்றினின்று ஒன்று தொடுத்துத் தொகுத்தலை விளக்கும் செய்முறைப் படம் :—முதல் நரம்பு நிற்க, ஏழாம் நரம்பு இணை நரம்பாக அல்லது சமனாக எண்ணிக் குறிப்பீராக. அதுவே இணைக் கோவை அல்லது சமன் கோவை. (ச-ப. முறைக் கோவைகள்)

—முல்லைத்தீம்பாணிக் கோவைகளைக் காணல்

| சுவர வீட்டு வரிசை | ச | ரி | ரி | க | க | ம | ம | ப | த | த | நி | நி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சுவர நிரல் | 1 | — | 3 | — | 5 | — | — | 2 | — | 4 | — | — |
| ஒன்றுக்கு மேல் ஏழாம் நரம்பு | 1 | — | 3-4 | — | 4.5 | — | — | 2-3 | — | 3-4 | — | — |
| ஏழாம் நரம்பு | ச | — | ப-ரி | — | த-க | — | — | ச-ப | — | ரி-த | — | — |
| எய்திய தொகுப்பு | ச | — | ரி | — | க | — | — | ப | — | த | — | — |

எனவே குரலுக்கு இணை நரம்பு—ஏழாம் வீட்டு நரம்பு ஆகிய இளி. (ச. ப); குரலுக்கு நட்பு நரம்பு நாலாம் வீட்டு நரம்பாகிய வன்கைக்கிளை (ச-க) (குறிப்பு :—இணை, கிளை, நட்பு என்பதை

இன்று இசைப்பெருநூல் வெளியிட்ட சிலர் வேறுவிதமாகப் பழம் இசை நெறிக்கு முரணாக விளக்கியுள்ளனர், அவற்றை விடுக்க).

இனி முல்லைத்தீம்பாணியைப் பாடுதற்குக் கூறிய கோவைகள் (சுவரங்கள்—) ச ரி க ப த ச்—என்பதால் முதன் முதல் மோகனம் எனத் தெளிவாய் அறிவித்தார் டாக்டர் எசு. இராமநாதர். அடியார்க்கு நல்லார் முல்லைத்தீம்பாணி என்பது—சாதாரிப் பண் என்றார்.

எனவே, சென்னைப் பண்ணாராய்ச்சி நூலில்—ப. சுந்தரேசனாரும் ப. சாம்பமூர்த்தியும் பிற ஓதுவார்களும் கூறி முடிவெடுத்து வெளியிட்டுள்ளது தவறு என அறியலாம்: அதாவது சாதாரி என்பது பந்துவராளி என்றது தவறு. அது மோகனமாகிய முல்லைப்பாணியே. பாணி என்பது இசைப்பண்ணைக் குறிக்கும் சொல் என்பதற்குப் பலப்பலச் சான்றுகள் உள்ளன. (பலச் சான்று = உறுதியான சான்று)

**சாதாரி பற்றிய தவறான கருத்துகள்:**

முல்லைத்தீம்பாணியை விபுலாநந்தர் விளரிப்பாலையாகக் கொண்டது (1974. யாழ்நூல். ப. 178) சிறிதும் விளங்கவில்லை. விளரிப்பாலை நெய்தற்குரியது. அதனை முல்லையோடு இணைக்க இயலாது; மற்றோரிடத்தில் (ப. 281) ''சாதாரியானது தேவ மனோகரி எனப் பாராட்டப்பட்டது'' என்கிறார். மோகனம் வேறு, தேவமனோகரி வேறு. இரண்டையும் யாழ்நூலார் இணைத்தது எவ்வாறு பொருந்துவதோ? இரண்டின் சுவரங்கள் வேறு.

இனி விபுலாநந்தர் 'சாதாரிதா' என்று சங்கீத ரத்னாகரம் வருணித்துள்ள ஒரு பண்ணை, பெயரொற்றுமையே கொண்டு, சாதாரிப் பண் என்று கூறியுள்ளார். (பக். 281); சாதாரிதா எனும் வடவர் பண்ணிலே—'நீ', 'மா' எனும் சுவரங்கள் ஒலிப்பதாகக் குறிக்கப்பட்டுள்ளதால், சாதாரிதா என்னும் வடமொழிப் பண்ணானது சாதாரி ஆகாது என நீக்குதற்குரியது. முல்லைப் பண் தமிழகத்தில் தோன்றிய முதன்மைப்பண்; முன்மைப்பண்; தமிழுக்குரிய பண். விறகாளாய் வந்த சிவனார் பாடிய சிறப்புடைப் பண்—சாதாரி. சங்க காலத்தில் முல்லைப்பாணி என்று பெயர் இருந்தது. தேவார காலத்தில்தான் அதற்குச் சாதாரி என்ற பெயர் தோன்றியது; மிகப் பிற்காலத்தில் அதற்கு மோகனம் என்ற பெயர் தோன்றியது. சாதாரியில் உள்ள தேவாரப் பாடல்கள்:—(1) கோழை மிடறாக. (2) பெண் இயல். (3) கோங்கமே. (4) இடமதில் அணி. (5) காம்பினை. (6) நீலமேனி. (7) மண்ணதுண்ட. (8) பரசுபாணியர். (9) பவளமேனி. (10) உற்றுமைசேர். (11) பாயுமால் விடை. (12) துன்றுகொன்றை. (13) தலையே நீ வணங்காய். (14) தேடிக்

கண்டு. இந்தப் பதினான்கு பாடல்களையும் மோகனமாகிய சாதாரி யில் இசையமைத்துப் பாடுதலே தேவார இசை நெறியாகும். சம்பந்தரும் அப்பரும் மட்டுமே சாதாரிப் பண்ணில் பாடியுள்ளனர்.

**தவிர்க்க வேண்டியனவும் செய்ய வேண்டியனவும் :**

(அ) மூன்றும் திருமுறையில் 67 முதல் 117 வரையுள்ள பதிகங்களும், நான்காம் திருமுறையில் 9ஆம் பதிகமும் சாதாரிப் பண்ணிற்குரியனவாதலால் அவற்றை வேறுவேறு பண்களில் பாடாமல் மோகனத்திலேயே பாடுதற்கு முனைதல் வேண்டும். அதுவே தேவார இசை நெறியாகும்; பிற பண்களில் பாடுதல் 'பாவமாகும்'. பந்துவராளியில் பாடுதல் மிகப் பெருந்தவறாகும். இடைக்காலத்தவர் தேவார இசைநெறி பிறழ்ந்து செய்துள்ள பிழைவிடுத்து கருதுதற்குரிய சாதாரியில் பாடுதலே இசை மயமாகிய இறையருள் பெற வழியாகும். (ஆ) மோகனம் எனும் பெயர் விடுத்துச் "சாதாரி, முல்லைப்பாணி, முல்லையந் தீம்பாணி" எனும் பெயர்களை இசைக் கல்லூரிகள் வழக்குக்குக் கொண்டு வருவதால் – இசை வரலாறும், இசை மரபும் பெருகி உலகிற்கு எடுத்துக்காட்ட உதவும். மோகனம் என வழங்குவதால் இசை நெறியின் வழிவழி வரலாற்றுத் தொடர்பு அற்றுவிடுகிறது.

**தொகுப்புரை:**—(1) சாதாரியைச் சென்னைப் பண்ணாராய்ச்சி யாளர் பந்துவராளி என்றது தவறு. (2) சாதாரி என்பது முல்லைப்பாணி (மோகனம்). (3) பண்டைப் பண்களைப் பிற் காலத்திய இராகப் பாடுமுறை கொண்டு முடிவுசெய்யும் முறை சிறந்ததன்று என்பதே க. வெள்ளைவாரணர் கருத்து. (4) முல்லைப் பண்பற்றி முதன்முதல் ஆய்ந்துரைத்தவர் டாக்டர் எசு. இராமநாதர். (5) தேவாரப் பதிகங்களுள் சாதாரிக் குரியனவற்றை, சாதாரியிலே பாடுதலே முறையாகும். (7) சிலப் பதிகாரத்தின் வழியாகப் பழம்பண் ஆய்வுமுறைகள் மலர்தல் வேண்டும். புதிய பல்கலைக் கழகங்கள் அத்துறைகளைத் தொடங்குதல் பயன்படும். (8) பண்ணுக்கும் முறைகள் பலப்பல; அவற்றை உலகுக்குத் தமிழகம் தருகிறது; தந்துள்ளது. (9) தமிழக இசை வரலாறு தொல்காப்பியம் தொட்டு நெறி முறையாக எழுத அரசு ஒரு துறையைத் தொடங்குதல் இன்றியமையாதது.

மதுரைப் பல்கலைக்கழகம், தமிழ்ப்பெரும் தொண்டர் அறிவர். சுப. மாணிக்கனாரின் ஆற்றுப்படுத்தலால்—'பழந்தமிழ் இசைத் துறைச் சொற்களஞ்சியம்' ஒன்று முதன் முறையாகத் தொகுத்து முடித்து அச்சிடும் நிலையை எய்தியுள்ளது. இசை ஆய்வாளர்க்கும் பெரிதும் உதவும் கருவிநூலாக அது பயன்படலாம்.

———

# சொற்கள் சொல்லும் கதைகள்

[வேலூர் ம. நாராயணன், எம். ஏ.]

எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்பது தொல்காப்பியர் கருத்து. இன்று தமிழ்மொழியில் வழங்கப்பெறும் அனைத்துச் சொற்களுக்கும் பின்னணியில் ஒரு வரலாறு அல்லது ஏதேனுமொரு குறிப்பு உண்டு என்பதைச் சிலர் உணர்வதில்லை. அறிவியல் வேகமாக வளர்ந்துவரும் இந்நாளில் எதற்கும் ஏன்? என்ன? என்று கேட்டறிய வேண்டிய கட்டத்தில் நாம் இருக்கிறோம்.

நம் தமிழ்மொழியில் நடைமுறையிலுள்ள சில சொற்களை எடுத்து ஆய்வோமானால், அவற்றுள் சில அரிய வரலாறுகள் பொதிந்திருப்பதைக் காணலாம். வேற்றுமொழிச் சொற்கள் பல தமிழில் எங்ஙனம் ஊடுருவியுள்ளன என்பதையும் காணலாம். இனி வரும் தலைமுறையினர்க்கு இவ்வாய்வு பெருமளவில் பயன் தரும். முன்னரே இத்தகைய சொல்லாராய்ச்சித் துறையில் மூழ்கி நல்ல கருத்து முத்துகளை வழங்கியவர்களுள் முதன்மையானவர்கள் ஈழத்து ஞானப்பிரகாச அடிகள், மறைமலையடிகள், மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் ஆகியோராவர். மேலும் அத்தகைய ஆய்வுக்குரிய சொற்களை ஈண்டுக் காண்போம்:

**அரவணைத்தல் :**

நண்பர்கள், உறவினர்கள் இறுகக் கட்டித் தழுவிக் கொள்வதை 'அரவணைத்தல்' என்பர். இச் சொல்லை அரவு + அணைத்தல் எனப் பகுத்துப் பார்க்கையில், இதன் சொல்லாக்கம் விளங்குகிறது. பாம்புகள் ஒன்றோடொன்று இறுகக் கட்டித் தழுவிக் கொள்வதில் சிறப்பு மிக்கனவாகும். இங்ஙனம் பாம்புகளைப் போல இறுகக் கட்டித் தழுவிக்கொள்வதையே 'அரவணைத்தல்' என வழங்குகிறோம். (அரவு = பாம்பு : அணைத்தல் = கட்டித் தழுவுதல்)

**கதர் :**

இஃது ஓர் அராபியச் சொல்: 'மரியாதைக்குரிய' என்று பொருள்படும். ஒருமுறை, ஓர் இசுலாமியப் பெரியவர், காந்தியடிகளாரிடம், ஒரு புத்தம் புதிய கைக்கறி ஆடையைக் கொடுத்து 'இதனைக் கதராகப் பாவித்து ஏற்க வேண்டும்!' என்றார். அன்று முதல் காந்தியடிகள் கையால் நூல் நூற்று நெய்யும் ஆடைகட்குக் 'கதர்' என்றே பெயரிட்டு அழைக்கலாயினர்.

**இஞ்சி மரப்பா :**

பித்தத்தைப் போக்கும் நல்ல மருத்துவப் பொருள் இது. இதன் உண்மை வடிவம் 'இஞ்சி முறைப்பாகு' ஆகும். இஞ்சியும் வெல்லப்பாகும் முறையாகக் கலந்து செய்யப்படுகின்ற பொருள் 'இஞ்சி முறைப்பாகு' ஆகும். நாளடைவில் இச் சொல் மருவி, 'இஞ்சிமரப்பா' ஆகிவிட்டது.

**மூட்டைப்பூச்சி :**

வீட்டின் 'முகட்டில்' அடை அடையாக வாழும் இப் பூச்சிக்கு 'முகட்டுப் பூச்சி' என்று பெயர். இவற்றிற்கு 'இரத்த தானம்' செய்யாதவர் எவருமிலர். இந்த 'முகட்டுப் பூச்சியே' காலப் போக்கில் 'மூட்டைப் பூச்சி' எனத் திரிந்துவிட்டது. மரத்துண்டு களை இணைத்த மூட்டுகளில் தங்கி வாழும் பூச்சி மூட்டுப் பூச்சி. அது மூட்டைப் பூச்சி என மருவியது என்றும் கூறுவர்.

**சீமை :**

'சேய்மை' என்பது தொலைதூரத்தைக் குறிக்கும் பழந்தமிழ்ச் சொல். இதுவே, தொலைதூர நாடுகளையும் குறிப்பதாயிற்று. இச் சேய்மை—சீமை என உருமாறி, மேல் நாடுகளைக் குறிக்கப் பயன்படுகிறது. 'சீமைக்குப் போய்ப் படித்தவர்கள்!' என்பது உலக வழக்கு.

**சப்ளாங்கோல் :**

வடஆற்காடு மாவட்டப் பெரும் பகுதியில் சாப்பிடும் பொழுது, 'சப்ளாங்கோல்' போட்டு அமர வேண்டும் என்பர். இச் சொல்லின் மூலவடிவம் 'சமணக்கால்' என்பதாகும். பிறந்த மேனியில் வாழ்ந்த சமணத் துறவியர், அமர்ந்திருக்கும் நிலையைச் சமணக்கால் என்பர். அவர்கள் திசைகளை ஆடையாகக் (திக்+அம்பரம்= திகம்பரம்) கொண்டு அஃதாவது பிறந்த மேனியராக வாழ்ந்ததால் 'திகம்பர சாமியார்கள்' என்று அழைக் கப்பட்டனர்.

சமணக்கால் — சம்மணக்கால்—சப்பளாங்கால் = சப்ளாங்-கோல் என்றாகிவிட்டது.

நாளடைவில் ஆடையின்றி இருப்பவர்களைக் கண்டால் 'சம்மணர்கள்' என்றனர். தமிழில் 'ச'கரம் 'அகரமாகவும் திரியும்' சான்று=சந்தி—அந்தி., எனவே 'சம்மணம்'—அம்மணமாகி; பிறந்த மேனியாக எவர் இருந்தாலும் 'அம்மணமாக' உள்ளார் என வழக்கில் வந்துவிட்டது.

**மிளகாய் :**

மிளகாயின் தாயகம் 'சிலி' நாடாகும். அதனால்தான் ஆங்கிலத்தில் இன்றும் அதை 'சிலி' (Chille) என்றே குறிப்பிடுகின்றனர். தமிழகத்தில் மிளகு உண்டு; அது காரம் மிக்கது; அதன் காரத் தன்மையைக் கருதி மிளகு+காய்=மிளகாய் என வழங்கத் தொடங்கினர்.

**காக்கை பிடித்தல் :**

செல்வந்தர்களிடமும், செல்வாக்கு மிக்கவர்களிடமும் தாம் நினைத்ததைக் 'கால் கை' பிடித்தாவது சிலர் நிறைவேற்றிக் கொள்வர். இந்தக் கால் கை பிடித்தல்' என்னும் பழக்கமே, நாளடைவில் 'காக்கை பிடித்தல்' எனத் திரிந்துவிட்டது. இன்றும் சிலர் 'ஒரு கால் நான்வந்தால்...' என்பதை 'ஒருகா நா வந்தா...' என்பர். அதுபோல, 'கால்+கை' என்பது கா+கை=காக்கை—காக்கா (பிடித்தல்) என்றாயிற்று. 'காக்கை வலி' என்னும் நோய் கால் கை இழுப்பு—என்னும் பொருளில் வந்தது.

**தாலாட்டு :**

தமிழில், 'தால்' என்பது நாக்கினைக் குறிக்கும் ஒரு சொல். (தால், தாலம்—நாக்கு) குழந்தைகளைத் தூங்க வைக்கத் தாய்மார்கள் நாக்கினை லுலுலு... என்றோ, ர, ர, ர... என்றோ ஆட்டுவர். இங்ஙனம், நாக்கினை ஆட்டிப் பாடுவதால் (தால்+ஆட்டு) 'தாலாட்டு' என வந்தது.

**தெய்வம் :**

இந்தத் தூய தமிழ்ச் சொல்லை வடசொல் என்று மயக்குவர் சிலர்: மயங்குவர் பலர். மாந்தன் முதன் முதலில் 'தீ'யைக் கண்டு மிகவும் அஞ்சினான்; பின்னர், அதன் பல்வேறு பயன் கருதி வணங்கத் தொடங்கினான். எனவே,

தீ—தே—தேய்—தெய்—தெய்வம் என்ற சொல் பிறந்தது. இரண்டு பொருள்களை ஒன்றோடொன்று அழுந்தத் தேய்ப்பதால் 'தீ' பிறக்கும் என்பது அறிவியல் உண்மை. பின்னர், தெய்வம் என்பதற்கு 'ஒளி தரும், ஒளி பொருந்திய' என்று பொருள்கள் தோன்றி 'தெய்வப் புலவர் திருவள்ளுவர்' என்பது, நம் மனவிருள் நீக்கும் ஒளி பொருந்திய குறளைத் தந்த 'திருவள்ளுவர்' என்று பொருள்படும்.

மாலை :

மா = கருமை, இருள், மயக்கம்; பகலும் இரவும் சந்திக்கும் போது ஒளியில் ஒளி மயக்கம் தோன்றும். அதனால் 'மாலை' என்றனர். அங்ஙனமே, பல வண்ண மலர்கள் ஒன்றாக இணைந்து மயக்கந் தருவதால், மலர்த் தொகுதிக்கும் 'மாலை' என்ற பெயர் வழங்கலாயிற்று.

பியூன் :

புதுவையை பிரெஞ்சுக் காரர்கள் ஆண்ட பொழுது, அலுவலக மறைச் செய்திகள் வெளியில் செல்லாதிருக்கும் பொருட்டு, சின்னஞ் சிறு பையன்களை வேலைக்கு அமர்த்திக் கொண்டனர். ஆனால், பிரஞ்சு அதிகாரிகட்குப் 'பையன்' என்ற சொல் வாயில் நுழையாததால் பியூன் (பையன்—பயன்—பியூன்) என்றனர். அதுவே, இன்றளவும் நின்று நிலைத்து வழங்கி வருகிறது.

ஜோடி :

இந்த வடசொல்லின் மூலம் 'சுவடி' என்னும் தமிழ்ச் சொல் ஆகும். சுவடி = இணை, தொகுதி, பல ஓலைகளின் தொகுதிக்குச் சுவடி (நூல்) என்று பெயர். இரு பாதங்கள் நிலத்தில் பதிந்த அடையாளத்துக்குக் 'காலடிச் சுவடுகள்' என்று பெயர். ஆணும் பெண்ணும் இணையாகச் செல்வதைச் 'சுவடி'யாகப் போகின்றனர் என்பர். எனவே, சுவடி—சோடி—ஜோடி எனத் திரிந்து, வட மொழிக்குள் புகுந்து விட்டது.

ஜவுளி :

'சவளி' என்னும் தூய தமிழ்ச் சொல்லின் வடமொழி வடிவமே 'ஜவுளி' ஆகும். 'சவளி' என்பது பருத்திக்குரிய மருத்துவப் பெயர்களுள் ஒன்று. பருத்தி பல நிலைகளில் வகை களில், அடிபட்டு, மிதிபட்டு, பண்பட்டு 'துணி'யாக மாறுவதால், அதற்கும் 'சவளி' என்று பொதுப் பெயர் அளித்தனர். அதுவே பின்னர் 'ஜவுளி' என்றாயிற்று.

ஜவுரி முடி :

'கால்' அடி அளவுகூட இல்லாத சில பெண்களின் கூந்தலை 'கால் அடி' வரை தொடச் செய்வது ஜவுரி முடி. முற்காலத்தில், இன்றைய 'யாக்' எருமைகளைப் போன்ற நீண்ட சடை முடிகளைக் கொண்ட 'கவரிமான்' என்றொரு மானினம் உண்டு. அதன் முடியினைக் கத்தரித்து ஒட்டுக் கூந்தலாகப் பயன்படுத்துவர்.

முடியின்மையால், கவரிமான்கள் குளிர்தாங்காது இறந்துவிடும். இத்தகைய 'கவரி முடியே' காலப்போக்கில் கவரி முடி என்பது சவரி முடியாகி இன்று 'ஜவுரி முடி'யாகி விட்டது.

> "மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
> உயிர் நீப்பர் மானம் வரின்" (குறள். 969)

பைத்து :

வணிக நிலையங்களில் இச்சொல் பரவலாகப் பயன்படுத்தப் படுகிறது. இதற்குப் பற்றுதல் என்பது பொருள். இது 'பற்று' என்னுஞ் சொல்லாயிற்று. இதன் கொச்சை வடிவமே 'பைத்து' ஆகும்.

அருவி :

மலையிலிருந்து விழும் மழைநீர் பாறைகளை நெருங்கி, அரித்துக்கொண்டு நிலத்தில் விழுவதால் அதற்கு 'அருவி' என்று பெயர். இந்தத் தூய தமிழ்ச்சொல்லை மறந்துவிட்டு, 'water fall' என்னும் ஆங்கிலச் சொல்லைப் பெயர்த்து 'நீர் வீழ்ச்சி' என்று வழங்கி வருகிறோம்.

உருது :

தில்லி இசுலாமியரின் தலைநகராக இருந்தபோது இசுலா மியப் படை வீரர்கள் பாசறைகளில் (பாளையத்தில்) இந்தி பேசும் மக்களோடு பழகினர். அப்போது இந்தியும், பாரசீக அரபிச் சொற்களும் கலந்து ஒரு புதுக் கலவை மொழி தோன்றிற்று. அதற்குப் பாசறை அல்லது பாளையம் (camp) என்று பொருள் தரும் 'உருது' என்னும் பாரசீகச் சொல்லையே இட்டழைத்தனர்.

மொல்லை மாறி :

எவர்க்கும் அடங்காத போக்கிரிக் குடியர்களை 'மொல்லை மாறி' என்பர். இதன் மூல வடிவம் 'முல்லை மாறி' ஆகும். முல்லை என்பது இயல்பு, நிலை, தன்மை, கற்பு ஆகிய பொருள்களைத் தரும். அவ்வகையில் தன்னிலை மாறியவனை 'மொல்லை மாறி' என்கிறோம்.

மாடு :

இச்சொல்லிற்குக் கால்நடை, செல்வம், பக்கம் என்னும் பொருள்களும் உண்டு. 'செல்வம்' என்ற பொருளில் 'மாடல்ல மற்றையவை' என்பார் வான்புகழ் வள்ளுவர். 'பக்கம்' என்ற பொருளில் 'கால் மாடு, தலை மாடு' என்பது உலக வழக்கு.

**ஐயர் :**

'ஐ' என்பது வியப்பிடைச் சொல் : தம்மைவிட மேலான அறிவும் தலைமையும் ஆற்றலுங் கொண்டவர்களை வியந்து 'ஐயா' என அழைப்பது மரபு. 'என்னை முன் நில்லன்மின்' எனவரும் குறள் ஈண்டுக் கருதத்தக்கது. இதுவே, 'ஐயர்' எனவும் திரிந்தது. ஆனால், காலப் போக்கில், 'ஐயர்' என்னும் இச் சொல், ஒரு குறிப்பிட்ட இனத்தாரை மட்டுமே குறிக்குஞ் சொல்லாக மாறியமை—மாற்றப்பட்டமை அறிதல் வேண்டும்.

**வேஷ்டி :**

துணி வெட்டப்படுவதால் 'வேட்டி' ஆயிற்று. இதனை வடவர் 'வேஷ்டி' என மாற்றித் தம் மொழிக்கு உடுத்துக் கொண்டனர். அது மட்டுமன்று. தமிழில் வரும் 'ட' கரத்தை 'ஷ' கரமாக மாற்றிப் பல சொற்களையும் ஈர்த்துக் கொண்டனர். சான்று :

கோட்டி (குழு) = கோஷ்டி.
முட்டி = முஷ்டி.
இட்டம் = இஷ்டம்.
நட்டம் = நஷ்டம்.

இனி ஒரிரு ஆங்கிலச் சொற்களின் மூலங்களையும் ஆய்வோம்.

**Budget :**

நிதிநிலை அறிக்கையை ஆங்கிலத்தில் 'பட்ஜெட்' என்பர். பழைய இங்கிலாந்தில், வேட்டைக்குச் செல்லும் குதிரை வீரர்கள் தமக்குரிய உணவு, நீர், வெடி மருந்துகளை ஒரு சிறு பையில் எடுத்துச் செல்வர். அப் 'பை'க்குப் 'பட்ஜெட்' என்று பெயர். முதன் முதலாக, இங்கிலாந்து நாடாளுமன்றத்தில், நிதிநிலை அறிக்கையைத் தாக்கல் செய்த நிதியமைச்சர், இந்தச் சிறு பையில் வைத்துத்தான் அந்த அறிக்கையைக் கொண்டுவந்தார். அவர் அன்று தொடங்கிய அந்தப் பழக்கம், அவர்கள் ஆண்ட நம் நாட்டிற்கும் பரவி, இன்றளவும் நிலவி வருகின்றது. ஆம்! இன்றைக்கும் நிதிநிலை அறிக்கையை ஒரு சிறு பையில் வைத்து நிதியமைச்சர் அவைக்குக் கொண்டு வருவதை நாம் காணலாம். 'பட்ஜெட்' என்னும் அப்பெயர், அதனுள் வைக்கப்படும் அறிக்கைக்கு ஆகு பெயராகி வழங்குகின்றது.

**Banyan Tree :**

இஃது ஆல மரத்தைக் குறிக்கும் ஆங்கிலச் சொல். அரேபியர்கள் முதன் முதலாகக் கடல் வழியாக இந்தியா வந்து

வடநாட்டில் வாணிபஞ் செய்யத் தொடங்கினர். அப்பொழுது, 'பனியாக்கள்' எனப்படும் வடநாட்டு வணிகர்கள், ஆலமரத்தின் அடர்ந்த நிழலின்கீழ் அமர்ந்து வாணிபம் செய்வதைக் கண்டனர். நாளடைவில், அவர்கள் ஆலமரங்களையே 'பனியாக்கள்' என்று குறிக்கலாயினர். பின்னர் இச் சொல் ஆங்கிலத்திற் குடியேறி 'Banyan Tree' என்ருயிற்று.

**Board :**

'பலகை' எனும் பொருளுடைய இச் சொல், பலகையோடு தொடர்புடைய எல்லாத் துறைகளையும் ஊடுருவி, பின்வரும் அனைத்துப் பொருள்களையும் தருகின்றது; "பலகை, பலகையாற் செய்யப்பட்ட மேசை, மேசை மேற் படைக்கப்படும் உணவு (Boarding) மேசையைச் சுற்றி உட்காரும் மன்றத்தார், மன்றம், கழகம், (water Board, Etc., Board) இன்னபிற. இங்ஙனம், சிறப்பான சொற்களை யெல்லாம் தொடர்ந்து ஆய்வது புலவர்களின் அருங்கடனுகும்.

———

## தமிழ் ஆய்வு மன்றத் தொடக்க விழா

9-7-83 சனிக்கிழமை மாலை 5-30 மணி அளவில், சென்னை-39. மகாகவி பாரதி நகரிலுள்ள திருமதி நர்மதா தேவி அகர்வால் விவேகானந்த வித்தியாலயாவில், ஆட்சி மொழிக் காவலர் திரு. கீ. இராமலிங்கனர், எம். ஏ. அவர்கள் தலைமையில், தமிழ் ஆய்வுமன்றத் தொடக்க விழாவும், தமிழ்த் தொண்டர் திரு. கோ. முத்துப்பிள்ளை அவர்களுக்குப் பாராட்டு விழாவும் முறையே சிறப்பாக நடைபெற்றன. ஆய்வு மன்றத்தின் பெயர்ப் பலகையைப் பேராசிரியர் முனைவர் மா. நன்னன் அவர்கள் திறந்து வைத்து உரையாற்றினர்கள். பேராசிரியை முனைவர் பார்வதிராசன், புரட்சிப்பாவலர் கவிஞர் இரா. வைரமுத்து, எம் ஏ. ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். தமிழ்த் தொண்டர் கோ. முத்துப்பிள்ளை அவர்களுக்கு ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கனர் பொன்னுடை போர்த்திச் சிறப்பித்தார். தமிழ்த் தொண்டர் திரு. கோ. முத்துப்பிள்ளை அவர்கள் ஏற்புரை வழங்க விழாக்கள் இனிது நிறைவுற்றன.

## தமிழர் நாகரிகத்தை உலகெங்கும் பரப்பிய பெருமகனார்

தாமரைச் செல்வர், திரு. வ. சு. ஐயா அவர்கள், அண்மையில் சிவபதியடைந்த செய்தியறிந்து மிகவும் வருத்தமுற்றேன்.

1937-முதல் அவர்கட்கும் எனக்கும் தொடர்புண்டு. சென்னையில் முன்பு நான் போஸ் பிரசுராலயம் என்ற நிறுவனத்தை நடத்திவந்த போது, அவர்கள் எனக்கு நல்ல அறிவுரை கூறி ஊக்குவித்தார்கள். நான், பர்மிய நாட்டுக்கு வந்தபின்னரும் அவர்களுடன் தொடர்பு கொண்டு. இங்குள்ள தனவைசியர் கல்விக் கழகச் சார்பில் திருக்குறளைப் பர்மிய மொழியில் மொழிபெயர்த்து வெளியிட்டோம். அதுபற்றி அப்போது கலந்தாலோசித்தோம். நல்ல கருத்துகளைத் தெரிவித்தார்கள். 1964-ல் பர்மிய மொழிபெயர்ப்பு வெளிவந்தது. அதுபற்றிய செய்தி தமிழகத்து நாளிதழ் சிலவற்றில் வெளிவந்தது. அச்செய்தியைக் கண்ணுற்ற ஐயா வ. சு. அவர்கள் எங்கட்குக் கடிதம் எழுதி முழு விவரம் கேட்டபடி, நாங்கள் எங்கள் கழகத்திலிருந்து முழு விவரமும் சில புகைப்படங்களும் அனுப்பிவைத்தோம். அதைச் செந்தமிழ்ச் செல்வி 1964...65 இதழில் வெளியிட்டார்கள். சென்னையில் உள்ள இதர பத்திரிகை வெளியீட்டாளர்களுக்கு இல்லாத உயரிய தமிழ்ப்பற்றின் காரணமாக ஐயா அவர்கள், பத்திரிகைச் செய்தியைப் படித்தவுடனே எங்கட்குக் கடிதம் எழுதினார்கள். நாங்களும் உடனே செய்தியை அனுப்பலானோம்.

உலகின் மொழிகட்குள்ளே மிகச் சிறந்ததாகப் பலநாட்டறிஞர்கள் போற்றிவரும் நம் அருமைத் தமிழ்மொழியின் உயர்ந்த நூலாக விளங்கும் திருக்குறள் நூலைப் பிறநாட்டு மொழிகளில் வெளியிட்டுத் தமிழர் நாகரிகத்தை உலகெங்கும் பரப்ப எண்ணிய பெருமகன் ஐயா அவர்களாவார்கள். அவர்கள் பிரிவினால் தமிழுலகமும் சைவ உலகமும் ஓர் அருமைத் தமிழ்ப் பெருமகனை இழந்துவிட்டது. இவ்விழப்பு ஈடுசெய்ய முடியாததொன்றாகும். அவர்களின் இன்னுயிர், அம்பலவாணர் திருவடியில் அமைதியில் திளைக்க வேண்டுகிறேன்.

தாமரைச் செல்வரின் நற்பணிகளைக் கழகத்தின் காப்பாளர்கள் தொடர்ந்து ஆற்றித் தமிழுலகுக்கு நலம்பல புரியத் திருவருளை வேண்டுகின்றேன்.

அன்பன்,
காந்தி அண்ணாமலை.
இரங்கூன்.

இரங்கூன், பர்மா
16—5—83

---

### பூவாக மணந்தோன்!

அண்ணலைப்போல் காமராசர் ஆற்றி யுள்ள
அருஞ்செயல்கள் வார்த்தைகளால் கூறப் போமோ?
உண்ணாமல் உறங்காமல் கடமையாற்றி
உண்மையான தேசியத்தைத் தொண்டி லங்கி,
புண்ணாகித் தன்னுடலம் போகும் மட்டும்
பூவாக மணம்பரப்பிப் பண்பாய் ஓங்கி
நன்றாக நம்நாட்டைச் சிறக்கச் செய்த
கர்மவீரர் காமராசர் நாமம் வாழ்க!

—பாவலர் இடிமுரசு

# செய்திகளும் குறிப்புகளும்

## தில்லி திரு. எஸ். இராமையா அவர்களுக்குப் பாராட்டு

திருநெல்வேலி சைவ வேளாளர் பேரவையின் சார்பில் 19-5-83-ல் வண்ணார்பேட்டை சைவப் பெருமகனார் அலங்கார் டி. ஏ. கந்தசாமி பிள்ளை அவர்கள் தலைமையில், நெல்லை, பாரதியார் தெருவிலுள்ள ஸ்ரீ காமாட்சி திருமண மண்டபத்தில், தில்லி, தமிழ்ச் சங்கத்தலைவரும் இந்திய அரசின் கம்பெனி விவகாரங்கள், மற்றும் சட்டத்துறை கூடுதல்செயலருமான திருமிகு.எஸ். இராமையா பிள்ளை, பி.காம்.பி.எல். அவர்களுக்கு ஒரு பாராட்டு விழா நடைபெற்றது. சைவ வேளாளர் பேரவைத் தலைவர் திரு. எஸ். சொக்கலிங்கம் பிள்ளை விழாவிற்கு முன்னிலை ஏற்றார். திரு. ப. இலக்குமணன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். திரு. செண்பகம் பிள்ளையவர்கள் திரு. இராமையாபிள்ளை அவர்கட்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார். திரு. சங்கரன் பிள்ளை அவர்கள் வாழ்த்துமடல் வழங்கினார். பெருமக்கள் பலர் வாழ்த்துரையும் பாராட்டுரையும் வழங்கினர். திரு. இராமையா பிள்ளை அவர்களின் ஏற்புரைக்குப்பின் உ. இ. இராமசுப்பிரமணியனார் நன்றி அறிவிப்புடன் விழா இனிது நிறைவேறிற்று.

திரு. இராமையா பிள்ளை அவர்கள் எஸ். ஆர். சபரிப்பெருமாள் பிள்ளை அவர்களின் மூத்த மகனாராவார். திருவனந்தபுரத்தில் பி. காம். பட்டப் படிப்பையும், சென்னையில் சட்டப்படிப்பையும் படித்து முடித்தார். இவருடைய துணைவியார் அவர்களும் எம். எசி. பட்டதாரி என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. இவர்கட்கு ஓர் ஆண் மகனும் ஒரு பெண் மகளும் உள்ளனர். மூத்த மகனார் பி. இ. பட்டம் பெற்று அமெரிக்காவில் பணிபுரிந்து வருகிறார். மகள் பிரியபாலா ஒரு சிறந்த நாட்டிய நங்கையாக இருப்பதுயன்றி மருத்துவக்கலையில் இரண்டாம் ஆண்டு படித்து வருகிறார்.

திரு. பிள்ளை அவர்களின் தலைமையில் ஒரு கோடி ரூபா செலவில் தில்லி தமிழ்ச்சங்கத்திற்குக் கட்டிடம் கட்டப்பட்டு வருகிறது என்பதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. இங்கிலாந்து சென்று நாடாளுமன்றம் பற்றிய சட்டப்படிப்பினை ஓராண்டு காலம் பயின்றதோடு, வெளிநாடுகள் பலவற்றில் சுற்றுப்பயணமும் செய்திருக்கிறார். இவர் அனைத்துச் சைவமடங்களின் அன்பைப் பெற்றவராக இருப்பதோடு, பழகுதற்கு இனியருமாவார். மொத்தத்தில் திரு. பிள்ளை அவர்கள் சைவவேளாள இனத்தார்க்குள் பெரும்புகழும் பேராற்றலும் பெற்றவராவார். அவர்கட்கு எமது வாழ்த்தினைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

## தென்கலை வளர்ச்சி மன்றம் சுற்றுலா அடைவுக் கூட்டம்

தென்கலை வளர்ச்சி மன்றத்தின் சார்பில் 11—6—83-ல் சென்னை பூங்காநகர் அருள்மிகு கந்தகோட்ட வசந்தமண்டப மாடி அரங்கில், மன்றத் தலைவரும் வழக்கறிஞரும் முன்னாள் நகரத்தந்தையுமான திரு. கே. என். சீனிவாசன் அவர்கள் தலைமையில் சுற்றுலா அடைவுக் கூட்டம் நடைபெற்றது, அண்மையில் இலங்கை சென்று வந்த அறிஞர் திரு. த. கோவேந்தன் அவர்கள் "நான்பார்த்த இலங்கை' என்னும் தலைப்பில் அரிய சுவைமிக்க சொற்பொழிவாற்றினர். புலவர் மணி இரா. திருஞானசம்பந்தம் அவர்கள் வரவேற்புரை ஆற்றினர். செயலர் திரு. மா. சு. சம்பந்தம் அவர்கள் நன்றி நவின்றார்.

### 'இளமையின் குரல்' வெளியீட்டு விழா

டாக்டர் மா. இராசமாணிக்கனுர் இலக்கிய மன்றத்தின் சார்பில் 24-6-83-ல் சென்னை, தேவநேயப்பாவாணர் மாவட்ட மைய நூலகக் கட்டிடத்தில் "இளமையின் குரல்" என்னும் அரையாண்டு வெளியீட்டு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. பேராசிரியர் டாக்டர் மு. பி. பாலசுப்பிரமணியம் அவர்கள் விழாவிற்குத் தலைமை ஏற்ருர். டாக்டர் எம். எக்ஸ். மிராண்டா அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். திரு மா. ரா. அரசு அவர்கள் அறிமுக உரையாற்ற, திருமிகு. வ. உ. சி. சுப்பிரமணியம் அவர்கள் 'இளமையின் குரல்' இதழினை வெளியிட்டனர். திரு. வேணு தமிழ்வாணன் முதலிதழினைப் பெற்றுக் கொண்டார். கவிஞர் மணவை ப. வீரன், பேராசிரியை மா. ரா. தமிழரசி, கவிஞர் முருகன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். திரு. ச. குணசேகரன் நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது.

### டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்களின் 78 ஆவது பிறந்தநாள் விழா

தமிழரசுக் கழகத்தலைவரும், சட்ட மன்ற மேலவைத் தலைவருமான மாண்புமிகு டாக்டர் ம.பொ. சிவஞானம் அவர்களின் 78 ஆவது பிறந்த நாள்விழா 27—6—83-ல் மயிலை ஏ. வி. எம். இராசேசுவரி திருமண மண்டபத்தில், தமிழக முதல்வர் மாண்புமிகு ம கோ இராமச்சந்திரன் அவர்கள் தலைமையில் சீருஞ் சிறப்புமாக நடைபெற்றது. மாண்புமிகு மின் துறை அமைச்சர், ச. இராமச்சந்திரன் ஊரகத் தொழிலமைச்சர் மாண்புமிகு கே. ஏ. கிருஷ்ணசாமி, இராசா-சர் எம். ஏ. முத்தைய செட்டியார், முனைவர் ச. வே. சுப்பிரமணியம், சேலம் ஆ. சின்னையன் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். டாக்டர் ம. பொ. சி, அவர்கட்கு நமது வாழ்த்துகளையும் தெரிவித்துக்கொள்ளுகிறேம்.

## மதிப்புரை

### Heritage of the Tamils—Art & Architecture

(தமிழரின் மரபுச் செல்வம்—நுண்கலைகளும் கட்டிடக் கலையும்)

பதிப்பாசிரியர்: S. V. சுப்பிரமணியன், A. N. பெருமாள்
வெளியீடு: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி,
சென்னை—600 113. 1983. ரு. 25/- பக்கங்கள் xiii + 496.

இத்தொகுப்பில் 33 ஆங்கிலக் கட்டுரைகளும் 2 தமிழ்க் கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. பத்துக் கட்டுரைகள் இசைபற்றியும் பதினெருன்று ஆடல், நாடகம் நாட்டுப் புறக்கலைகள் ஆகியவை பற்றியும் எஞ்சியவை கோயிற் கட்டிடக்கலை, செப்புத் திருமேனிகள், ஓவியம் என்பனபற்றியும் எழுதப்பட்டுள்ளன. இசைபற்றிய கட்டுரைகள் இசைக் கருவிகள்பற்றியும் பண்டைய தமிழிசை பற்றியும் இன்றைய தமிழிசைபற்றியும் ஆராய்கின்றன. ஒரு கட்டுரை கல்வெட்டில் தமிழிசைக்குறிப்புகள்பற்றிய தகவலை அளிக்கிறது. ஒன்று தஞ்சைப் பொன்னையா பிள்ளையின் தமிழிசைத் தொண்டைப்பற்றியதாகும். ஆடல் பற்றிய கல்வெட்டுச் செய்திகளை ஒரு கட்டுரை விவரிக்கிறது. நாட்டுப்புறக்கலைகளைப்பற்றிய கட்டுரைகள் அவைபற்றித் தெரிந்துகொள்ள உதவும். தமிழில் மொழி

பெயர்க்கப்பட்ட நாடகங்கள் பற்றிய கட்டுரையொன்றும் இத்தொகுதியில் உள்ளது. ஓவியம்பற்றிய இரண்டு கட்டுரைகளைத் தவிர்த்துப் பிற கட்டுரைகள் செப்புத் திருமேனிகள்பற்றியும் கோயிற்கலைகள் பற்றியும் விளக்குகின்றன. 64 படங்கள் இத்தொகுப்பில் இணைக்கப் பட்டுள்ளன. தமிழர் கலைச்சிறப்பை அறிந்துகொள்ள இந்நூலில் இடம் பெற்றுள்ள கட்டுரைகள் பெரிதும் உதவும் என்பதில் ஐயமில்லை.

உலகப் புகழ் பெற்ற திருவாலங்காட்டு நடராசர் உருவத்தின் பின்புறத் தோற்றத்தைத் தவறாகக் 'குன்னியூர் நடேசர்' என்றும் அதன் எதிர்ப்பக்கத்தில் சரியான குன்னியூர் நடேசர் படத்தைக் கொடுத்திருப்பதும் வியப்பூட்டுவதாகும். மற்றபடி நூல் அமைப்பு முறை மிக நன்றாகக் கவர்ச்சிதரும் முறையில் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

### கலைஞர் கண்ட வள்ளுவர் கோட்டம்

[ஆசிரியர்: மா. செங்குட்டுவன், திருமாறன் நிலையம் 155, பீட்டர்ஸ் ரோடு, சென்னை—86, ரூ. 4-00]

ஆட்சிப்பீடத்தில் உள்ளவர்கள் மக்கள் நலம் நாடிப் பல நல்ல திட்டங்களைத் தீட்டுவதோடு, அயல் நாட்டவரும் கண்டுகளிக்கும் வண்ணம் கலைக்கூடங்கள், நினைவுச் சின்னங்கள், கோட்டங்கள் அமைத்தலும் நல்லாட்சியின் அறிகுறிகளாகும். அவ்வகையில் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் ஆட்சியில் உருவாக்கப்பட்ட ஓர் அரிய-அழகிய கலைக்கூடம் சென்னையில் உள்ள வள்ளுவர் கோட்டமாகும். இதைப்பற்றி அறிஞர்கள் கருத்துரை வழங்கியுள்ளனர். இக் கோட்டம் நிறுவப்பட்ட காலை ஏடுகள் பலவும் இதனைப் பாராட்டின. ஆனால், இக் கோட்டம் திறப்புவிழா நடைபெற்ற காலை, கோட்டத்தை உருவாக்கிய கலைஞர் ஆட்சியில் இல்லை. எனவே இக்கோட்டத்தினை உருவாக்கிய கலைஞர் பெயரையும் காணோம்! எனினும் இக் கோட்டம் உருவானது ஏன், எப்படி என்ற விவரங்களுடன் கலைஞர் பெயரையும் இணைத்து கலைஞர் கண்ட வள்ளுவர் கோட்டமாய்க் காண்கிறார் இந் நூலாசிரியர். இவரது முயற்சி பாராட்டத்தக்கது—பயனுடையது—தேவையானது.

### பாரதி இயல்

[பதிப்பாசிரியர் குழு: டாக்டர் இராம சண்முகம், டாக்டர் தெ. ஆண்டியப்பன், நெல்லை ந. சொக்கலிங்கம், டாக்டர் இரா. மோகன். மணிவாசகர் பதிப்பகம். 12-B மேலசன்னிதி சிதம்பரம். விலை: ரூ. 12-90]

பாரதியார் நூற்றாண்டு விழாவினை யொட்டி வெளிவந்துள்ள நூல்களுள் இதுவும் ஒன்று. மதுரை காமராசர் பல்கலைக்கழகம் அஞ்சல் வழித் தொடர் கல்வித்தமிழ்த்துறையின் 3-ஆவது வெளியீடாகத் திகழும் இந்நூல், மூன்றுநாள்கள் நடைபெற்ற ஒரு கருத்தரங்கில் அறிஞர்கள் பத்தொன்பதுபேர் நிகழ்த்திய 19 கருத்துரைகளின் அரிய தொரு தொகுப்பாகும். இதில் அறிஞர்கள் பாரதியாரைப் பல திருப்பங்களினின்று ஆய்ந்துள்ளனர். பாரதியாரைப்பற்றி மணிவாசகர் நூலகத்தார் வெளியிட்டுள்ள ஆய்வுகளில் இது

ஒன்பதாவது நூலாகும். பாரதியார்பற்றிக் கட்டுரை எழுதுவோர்க்கும், சொற்பொழிவு செய்வோர்க்கும் பெரிதும் பயன்படும் நூல்.

**பாரதிதாசன் பார்வையில் பாரதி**

[ஆசிரியர்: டாக்டர் ச. சு. இளங்கோ, அன்னம் பதிப்பகம், செகந்தை, 623 560. விலை: ரூ. 20

சுப்பிரமணிய பாரதியாரைப்பற்றி அறிஞர்களிடையே பல வகைக் கருத்துகள் நிலவுகின்றன. ஆனால், பொதுவாக அவர் மக்கள் கவிஞர் என்று எல்லாராலும் போற்றப் படுகின்றார். புதுவை வகை சுப்புரத்தினம் பாரதிதாசனாக மாறியது பாரதியாரின் பல பண்பு நலன்களாலும், பொதுநோக்காலும் ஈர்க்கப்பட்டதால்தான் எனில் மிகையாகாது. புரட்சிக் கவிஞர் என நம்மால் போற்றப்படும் பாவேந்தர் பாரதியாரின் சீடன் என்பதே பாரதியார் புகழுக்கு சான்றாகும்.

மேனாட்டறிஞர் சான்சனின் வரலாற்றினை வளம்பட எழுதிப் புகழ்பெற்றவர் பாசுவல் என்னும் அறிஞர். 'நல்லார் குணங்கள் உரைப்பதுவும் நன்றே' என்பதற்கிணங்கப் பாவேந்தர் பாரதிதாசனின் புகழ் பரப்பும் பணியில் டாக்டர் இளங்கோ அவர்களும் ஒரு பாசுவலாக விளங்குகிறார். பாவேந்தரின் [கவிதையாற்றலை மட்டுமன்றி, அவர்தம் ஆற்றலுக்கு வித்திட்ட பாரதியாரோடு அவரை இணைத்துப் புதுமுறையில் ஒரு வரலாற்றினை உருவாக்கிய டாக்டர் இளங்கோ அவர்களின் முயற்சியைப் பாராட்டுகிறோம்.

பாரதியாரைப்பற்றிய நூல்கள் எத்தனையோ வெளிவந்துள்ளன. ஆனால் அவையனைத்தும் பாரதிதாசனை வெளிக்காட்டாமல் பாரதிபுகழ் பாடுவதொன்றனையே குறிக்கோளாகக் கொண்டிலங்கும் இவ்வேளையில் 'பாரதிதாசன் பார்வையில் பாரதி' என்னுந்தலைப்பில் வெளிவந்துள்ள இந்நூல்தான் பாரதியாரை—மக்கள் கவிஞரைச் சரியான முறையில் மக்களுக்கு அறிமுகப்படுத்தும் அரிய வரலாற்று நூலாகும். இஃதொரு வரலாற்று நூலாகமட்டுமின்றித் தமிழ்நாட்டில் இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த இருபெரும் புலவர்களைப்பற்றிய ஒரு சிறந்த திறனாய்வு நூலாகவும் திகழ்கிறது. வரலாற்று ஆராய்ச்சியாளர்க்கும் பயன்படக் கூடிய அரிய நூல்.

---

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-௫௭, பரல் ௧௦. ௪௬௮ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிட். அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10–00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5–00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5–00 |
| ,, | விசாகநம்பி அவர்கள், சென்னை | 5–00 |
| ,, | பெப்பாக்கம் முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள், சென்னை-10 | 5–00 |
| ,, | த. கோவேந்தன், சென்னை-26 | 10–00 |
| ,, | சோமசுந்தரம் - செயமங்களம் (திருப்பணி நன்கொடை) | 5 00 |

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி. லிட்.

## கழக நிலையங்களில் கிடைக்கும்
## பிற பதிப்பாளர்களின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| நூருண்டு கண்ட பாரதி—எழிலமுதன் | 7 | 00 |
| இனி பொறுப்பதில்லை—சூர்யகாந்தன் | 19 | 00 |
| உள்ளதைச் சொல்லுகிறேன் ,, | 15 | 00 |
| பாரதி ஒரு பார்வை—வலம்புரிஜான் | 20 | 00 |
| ரவிகுல திலகன்—செம்பியன் | 18 | 00 |
| கம்பரின் சமயக் கொள்கை—ம. பொ. சி. | 9 | 00 |
| தங்கமுத்துக் கரையினிலே—ப. இளவழகன் | 30 | 00 |
| ம. பொ. சி.யின் இலக்கிய நூல்கள்—ஒரு மதிப்பீடு —டாக்டர் ப. அன்பு | 20 | 00 |
| தாரா தாரா தாரா—புஷ்பா தங்கதுரை | 16 | 00 |
| காற்றின் கதை—'கல்வி' கோபாலாகிருஷ்ணன் | 18 | 00 |
| யாரோ பார்க்கிறார்கள்—ராஜேந்திரகுமார் | 10 | 00 |
| அதிசய ராகம்—லட்சுமி | 18 | 00 |
| கோடை மேகங்கள்—லட்சுமி | 14 | 50 |

———

# கழகப் புதிய வெளியீடுகள்

## முல்லாவின் கதைகள் முப்பது

**ஆசிரியர் :** கழக இலக்கியச் செம்மல்,
புலவர் இரா. இளங்குமரன்.

அரபு நாட்டில் முல்லாவைப்பற்றிப் பல கதைகள் வழங்கி வருகின்றன. அக் கதைகளின் கருத்துடன் ஒன்றுபட்டுவரும் நம் நாட்டுப் பழங் கதைகளும் பல உள. அவற்றுள் சுவையான முப்பது கதைகளின் தொகுப்பே இந்நூல். இக் கதைகளைப் பயிலும் சிறுவர்கள் புதிய பட்டறிவினைப் பெற வேண்டும் என்னும் நோக்கத்துடன் இந் நூலாசிரியர் இனிய எளிய நடையில் எழுதியுள்ளார். பள்ளி மாணவர்கள் படித்தறிய வேண்டிய பயனுள்ள கதைகள்.

விலை : ரூ. 5 00

## பாரதியும் - திரு. வி. க. வும்

**ஆசிரியர்:** டி. வி. சங்கரக்குமாரு, நலவழிக் கல்வியாளர்,
திருநெல்வேலி.

பாரதியார் நூற்றாண்டு விழாவினை முன்னிட்டு அவரைப் பற்றி வெளிவந்திருக்கும் நூல்களுள் இதுவும் ஒன்று. இதன் சிறப்பு என்னவென்றால் பாரதியாரோடு ஒப்பிட்டுத் திரு. வி. க. அவர்களின் வாழ்க்கைச் சுருக்கத்தையும் தருகிறார் இந் நூலாசிரியர். பாரதியார் நாட்டு விடுதலைக்கு ஒரு புயலாகத் தோன்றிப் பணியாற்றினார். அதே நேரத்தில் திரு. வி. க. தென்றலாக விளங்கித் தீந்தமிழ்ப்பணியும் நாட்டுப்பணியும் சேர்த்துச் செய்தார். அந்தப் புயலும் தென்றலும் பற்றியதே இந் நூல்.

விலை : ரூ 3-50

## வையை வளம்

**ஆசிரியர் :** கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்

இந்நூல் பாண்டி நாட்டின் வளத்திற்கும் வாழ்விற்கும் வகை செய்யும் வையை ஆற்றின் பாங்கினைப் பல்வேறு திருப்பங்களினின்று அகப்புறச் சான்றுகளுடன் ஆராய்ந்து எழுதப்பெற்றுள்ளது. வளமான செந்தமிழ் நடையில் அமைந்துள்ளது. படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு. நூலகங்கள்தோறும் இடம்பெற்று ஆராய்ச்சியாளர்க்குப் பயன்படத்தக்க நூல்.

விலை ரூ. 7 00

## Studies in Tamil Literature and History

--Prof. V. R. Ramachandra Dikshitar, M.A.,

வரலாற்றுப் பேரறிஞர் தீட்சிதர் அவர்கள் எழுதிய தமிழ் இலக்கிய வரலாறுபற்றிய இவ்வரிய நூல் பல்லாண்டுகளாகக் கிடைக்காதிருந்தது. நூலின் அருமை கருதி, இதன் மறுபதிப்பு சிறந்த முறையில் கழக வெளியீடாக வெளிவந்துள்ளது. தமிழறியாப் பிற மொழியினரும் இதன் மூலம் தமிழ் இலக்கிய மாண்பினை அறியும் வாய்ப்பினைப் பெறலாம்.

ரூ. 40 00

அப்பர் அச்சகம், சென்னை-108.